# ஒப்பனை

பாரதநாட்டில் மலர்ந்த கலை, மனித முயற்சி
வரலாற்றிலே மகத்தான பொன்னேடாக மி
கிறது. கல்லிலும் பாறையிலும் தெரிகின்ற த
பழம்பெரும் கலையின் நினைவுமுகம். காலக் செ
மைகளையும் பருவமோதல்களையும் கடந்துமி
இன்று தேசப் பொருட்காட்சிசாலைகளிலே
காக்கப்பட்டுவரும் அப் பொக்கிஷங்கள்,
லைச் சிறகடித்த ஆக்க எழுச்சிக்குக் கண்கூட
சான்றுகளாக நின்று, தம்மைப் பெற்ற ம
சமூகத்திற்குப் பெருமைதருகின்றன.

ஒப்பனை என்றொரு சிற்பம்: (11-ம் நூற்றாண்
காஜுராஹோ சிற்ப மண்டலத்திலே செ
விருக்கும் எழில்வடிவம்.

சிற்பக் களஞ்சியங்களுக்காக மட்டுமின்றி,
வினைத் தொழில்களுக்காகவும் புகழ்பெற்றி
தது பழங்கால பாரதநாடு; நெசவுக் கலை வி
ர்களும், சாயம் தோய்த்தோரும், வார்ப்ப
கம்மாளர்களும் அப் பழங்காலத்திலே எ
யிருந்த கலைத்தேர்ச்சி என்றும் வியப்புக்குரிய

தொழில் முன்னேற்ற யுகமாகிய இந்நாள்,
பழங்காலத் தொழில்வல்லுனர்களின் பண்ப
டைத் தழுவும் ராயப்பூர், தற்கால எந்திர வ
களின் உதவியால், நேர்த்திமிக்க நெசவுகளை
துணிவகைகளையும் உற்பத்தி செய்கின்றனர்.

**கோடு போட்ட & கட்டம்போட்ட**
**ஷர்ட்டிங்**
**வெண்ணிற & சாயம்தோய்த்த**
**பாப்லின்**
**ப்ரிண்டெட் லான் & வாயில்**
**புட்டா-லினோ**
**ஸுப்பர்ஃபைன் வேஷ்டி**
**கேபர்டின் – கோட்டிங்**






## ராயப்பூர் மில்ஸ் அஹமதாபாத்

# ந்தலின் எழிலை எடுத்துக் காட்டுகிறது

# வஸ்திக் பர்ப்யூம்ட் காஸ்டர் ஆயில்

கூந்தலை மழமழப்பாகவும் கவர்ச்சியாகவும் ஆக்குகிறது



ஸ்வஸ்திக் ஹேர் ஸ்டைல் 'மயூர்'

சிறிதளவு ஸ்வஸ்திக் பர்ப்யூம்ட் காஸ்டர் ஆயிலைத் தடவி, கூந்தலை வாரி மூன்று கால்வாக்கிக்கொண்டு நடுப்பாகத்தைச் சுழற்றி ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டை போடவும். இரு பகுதிகளையும், எதிரும் புதிருமாகக் கொண்டையைச் சுற்றிச் செருகிவிடவும். பொருத்தமான அணிகளாலும் கொண்டையை அலங்கரித்துக்கொள்ளவும்.



ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்.

# டிரான்ஸிஸ்டராயினும் சரி,
# வழக்கமான செட் ரேடியோவாயினும் சரி..

# நேஷனல் எக்கோ

## ரேடியோக்கள் பரிசளிக்க மிகச் சிறந்தவை




மாடல் PT-775:
7 டிரான்ஸிஸ்டர்களும் 2 டயோடுகளும்; 3 பாண்டுகள், விசேஷ டிசைன் கொண்ட லவுட் ஸ்பீக்கர். உள்ளே பொருத்தப்பட்ட ஃபெர்ரைட் கம்பி மற்றும் ஃப்ரேம் ஏரியல்கள். வெளிப்புற ஏரியலுக்கு இணைப்பு வசதி.

ரூ. 328.00
தோல் பெட்டிக்கு ரூ. 20.00



மாடல் 806,
6 வால்வுகள், 3 வேவ் பாண்டுகள் புது மோஸ்தர் மரக் காபினெட். மாடல் U-806, AC/DC செட். மாடல் A-806, AC செட்.

ரூ. 395.00



ஹை-ஃபை மாடல் A-830:
AC செட். 6 வால்வுகள், 8 வேவ் பாண்டுகள். 2 ஹை-ஃபை ஸ்பீக்கர்கள். நீண்ட, இறக்கமான மரக் காபினெட்.

ரூ. 735.00



ஹை-ஃபை மாடல் A-786:
AC செட். 6 வால்வுகள், 5 வேவ் பாண்டுகள். 2 பர்மனென்ட் மாக்னெட் ஸ்பீக்கர்கள். கவர்ச்சியான மரக் காபினெட். பாஸ் மற்றும் ட்ரெபிள் கண்ட்ரோல்கள். பாண்டுகளை மாற்றப்பானோ சுவிட்ச்.

ரூ. 575.00

## இந்தியாவிலேயே மிகப் பெரிய ரேடியோ ஃபாக்டரியின் தயாரிப்பு

சிலர் டிரான்ஸிஸ்டர்களை விரும்புகிறார்கள்; மற்றவர் விரும்புவது வழக்கமான ரேடியோ செட்டுக்களை - உங்களுக்குகந்த நேஷனல் - எக்கோ 'மான்ஸூனைஸ்டு' ரேடியோவைத் தேர்ந்தெடுத்து, கிடைப்பனவற்றில் சிறந்ததை வாங்கிவிட்ட திருப்தியை அடையுங்கள்.

டிரான்ஸிஸ்டராயினும் சரி, வழக்கமான செட்டாயினும் சரி, நேஷனல் – எக்கோ 'மான்ஸூனைஸ்டு' ரேடியோக்களின் உறுப்புக்கள் வெப்ப நிலைகளுக்கென்று விசேஷமான ஒரு செய்முறைப்படி உருவாக்கப்பட்டுள்ளன – காலநிலை பாதிக்காதபடி இச் செய்முறை அவைகளுக்கு அளிக்கும் பாதுகாப்பு, மற்ற வழக்கமான முறைகளில் கிடைப்பதைவிடப் பதினாறு மடங்கு அதிகமானது.



மாடல் U-756 :
AC/DC செட், ஷார்ட், மீடியம் வேவ் பாண்டுகள். நேர்த்தியான நாதம் எழுப்ப 5" ஸ்பீக்கர். எழில் கொஞ்சும் பிளாஸ்டிக் காபினெட்.
ரூ. 125.00



மாடல் U-819 :
AC/DC செட். 5 வால்வுகள், 3 வேவ் பாண்டுகள். பேக்லைட் காபினெட்.
ரூ. 298 00

# மான்ஸூனைஸ்டு ரேடியோக்கள்

## நேஷனல் எக்கோ

## மட்டுமே!

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்.

* 6, நியூ குவீன்ஸ் ரோடு, பம்பாய் 4
* 3, மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா 13
* 1/18, மவுண்ட் ரோடு, மதராஸ் 2
* 27, நேதாஜி மார்க், தர்யாகஞ்ச், டில்லி 6
* 6092/1-2, ராஷ்டிரபதி ரோடு, செகந்திராபாத் 3
* ஃப்ரேஸர் ரோடு, பாட்னா 1
* 36/79 ஸில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பெங்களூர் ஸிடி 2

விலைகள் எக்ஸைஸ் ட்யூடி உட்பட, வரிகள் தனி



மாடல் A-829 :
AC செட். 6 வால்வுகள், 4 பாண்டுகள். பர்மனென்ட் மாக்னெட் ஸ்பீக்கர். பாஸ், ட்ரெபிள் மற்றும் மீடியம் நிலைகளுக்கு 3 புஷ் பட்டன் டோன் கன்ட்ரோல்கள். பாண்டுகளை அமைக்க ப்யானோ கீ ஸ்விட்சு. பேக்லைட் காபினெட்.
ரூ. 481.00



மாடல் BT-792 டேபிள் மாடல் :
7 டிரான்ஸிஸ்டர்களும், 2 டயோடுகளும், 3 பாண்டுகள். வார்ப்படக் காபினெட்.
ரூ. 365.00



மாடல் BT-757 டேபிள் மாடல் :
7 டிரான்ஸிஸ்டர்களும், 2 டயோடுகளும், 4 பாண்டுகள். அழகிய மரக் காபினெட்.
ரூ. 415.00

## பொருள் இன்றுண்டோ ?

னிமல ரொன்றைக் கேட்டேன்
னியின் பொருளேது வென்று
கனியிதழ் நடுங்கச் செந்தேன்
கண்ணீர் விட்டதோர் சொட்டு!

கார் முகிலொன்றைக் கேட்டேன்
கருணையின் பொருளேது வென்று
நீருடை நெஞ்சம் விம்மி
நெகிழ்ந்து கரைந்தது மழையாய்!

கதிரொளி தன்னைக் கேட்டேன்
கடமையின் பொருளேது வென்று
எது பொருளென்றியம்பாமல்
எல்லை யிலாழ்ந்தது இருளாய்!

மனிதனைக் கண்டே கேட்டேன்
வாழ்வின் பொருளேது வென்று
பணம் பணம் பணமெனக் கூவிப்
பாய்ந்து சென்றான் அதைப் பற்ற!

''இறைவ! நீ சொல்வாய்'' என்றேன்
''இதற்கொரு பொருள் இன்
றுண்டோ?''
திருதிருவென்று விழித்தான்!
சிலையெனச் சிரித்தெதிர் நின்றான்!

— ''குறள்''

# கல்கி

## பொருளடக்கம்

குரோதி கார்த்திகை 28 — டிசம்பர் 13


பிரிட்டிஷ் இந்தியா
மாகா ணங் கள்
பிளப்பு


பட்டேல் ஸ்தாபித்த இந்தியா
பிணைப்பு


சோஷலிஸ இந்தியா
மண்ட லங்கள்
பிளப்பு


என்ன உற்பத்தி செய்திருக்கிறாய்? சீக்கிரம் சொல்.
நான் என்ன உற்பத்தி செய்ய முடியும்? நீங்கள் தான் சொல்லுங்கள்
கொள்முதல் நிர்வாகிகள்
விவசாயி


அசல் கம்யூனிசம்
சீக்கிரமே நாம் இந்த மூலையைத் திரும்பி விடுவோம்.
PK



மலர் 24 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 20

# இரு தீய முடிவுகள்

எவ்வளவுதான் எடுத்துக் காட்டினாலும் காங்கிரஸ் ஆட்சி ஒருபோதும் தவற்றை உணர்ந்து சீராகப் போவதில்லை என்பதை நிதிமந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் இரண்டு முனைகளில் நிரூபித்திருக்கிறார்.

காங்கிரஸ் ஆட்சியின்கீழ் நாட்டின் நன்னெறிகளைச் சிதைப்பதற்கு முக்கியமான ஆயுதமாக இருப்பது கம்பெனி 'நன்கொடை' எனப்படும் மறைமுகக் கப்பமாகும். பொருளாதாரத்தைப் பாழ்படுத்துவதற்கு ஆட்சியாளர்களின் முக்கியமான ஆயுதம் செல்வ வரியாகும்.

இவ்விரண்டையும் பழையபடியே அமுல் செய்வது எனப் பிடிவாதம் செய்து, நாட்டின் நெறி, பொருளாதாரம் இரண்டையும் குட்டிச்சுவராக்கும் கைங்கரியத்தை ஸ்ரீ டி. டி. கே அவர்கள் வலுப்படுத்தி யிருக்கிறார்.

கம்பெனிகளைக் கணக்குக் காட்டச் சொல்வதால், லஞ்சமாகக் கொடுக்கப்படும் பெரும் நன்கொடைகளைத் தடுத்துவிட முடியுமா? தற்போது எங்கோ நூற்றிலொரு தொழில் நிறுவனம் எதிர்க் கட்சிகளுக்குத் தரும் நன்கொடைகளும் அப்போது ஆட்சியாளரின் பார்வைக்கு வந்து விடுமாதலால் முதலாளிகள் அஞ்சுவார்கள். எதிர்க் கட்சிகளுக்கு இப்போது கிடைத்துவரும் அற்ப உதவியும் அற்றுப் போய்விடும். 'கணக்குக் காட்டச் செய்வோம்' என்று சத்தியத்தின் தரப்பில் கூறுவது போல் கூறும் வேஷப் பேச்சு எதிர்க் கட்சிகளை நசுக்கும் உபாயமன்றி வேறில்லை.

மற்ற எல்லாக் கட்சிகளுக்கும் மாறாக ஆளும் கட்சி மட்டிலும் வெட்கமின்றி கம்பெனி நிதிக்குப் பறப்பதிலிருந்தே அக் கட்சி பண பலத்தில்தான் நடக்கிறது என்பதும் தனது அதிகார பலத்தின் மூலமே அது பணத்தைப் பெறுகிறது என்பதும் வெளிப்படையாகின்றன. இதற்குப் பலவிதமாகப் பொய்ச் சமாதானங்கள் சொல்வது தான் பரிதாபம்.

லஞ்ச ஊழலைக் கெல்லியெறியப் போவதாக வெகுவாகப் பறைசாற்றிக் கொண்டு அரசாங்கம் நியமித்த சந்தானம் கமிட்டியின் ஒரு முக்கியமான யோசனை கம்பெனி நன்கொடைகளைக் கட்டுப்படுத்துவதாகும். அதனையும் அலட்சியம் செய்துவிட்டார்கள். பணம் ஈட்டும்போது தொழில் நிறுவனத்தோரின் நன்னெறியைப் பாதிப்பதற்கும், இதன் விளைவாகத் தேர்தல்களின் போது தேச மக்கள் அனைவரின் நன்னெறியையும் பணப்பேயின் முன் நாசப்படுத்துவதற்கும் ஆதாரமான ஒரு தீய நடவடிக்கைக்கு உயிரூட்டப்பட்டிருக்கிறது.

மற்றொரு தீய முடிவு செல்வ வரி பற்றியது. பசு மாட்டின் பாலை மட்டும் கறந்து கொள்ளாமல் அதன் ரத்தத்தையே பிழிந்து எடுத்துக்கொண்டு அதைக் கொல்லுவது போல் செல்வ வரி மூலம் உற்பத்தியாளரை அடியோடு ஒழிக்கப் பார்க்கிறார்கள்; உற்பத்தியாளர்கள் அழிந்து போவதை வேண்டுமானாலும் மக்கள் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் அது காரணமாக உற்பத்தியே அழிந்து போய்விடும், தேசப் பொருளாதாரமே பாழ்படும் என்பதை மக்கள் மறக்கலாகாது. தொழில் துறையில் ஈடுபட்டுள்ள அவ்வளவு பேரும் ஆட்சேபிக்கும் வரிகளை அவர்கள்மீது விதித்தாகி விட்டது. விகிதாசாரப் பிரதி

திறித்துவம் நாட்டில் இல்லாததால் உற்பத்தியாளரின் நியாய வாதத்தைப் பார்லிமென்டில் உணர்த்துவதற்கு யாருமே யில்லை.

எந்த எதிர்வாதமும் ஆட்சியாளரிடம் எடுபடாது எனத் தெரிந்த பின்னும் நாட்டு நலனில் அக்கறை கொண்டோர் கண்டனம் தெரிவிப்பதற்குக் காரணம், அரசாங்கம் புரிந்துகொள்ளப் பிரியப் படாத கொள்கைகளை மக்களேனும் புரிந்து கொள்ள வேண்டும் என்பது தான்; அடுத்த தேர்தலின்போ தேனும் மக்கள் இந்தக் கொடுமைகளை உணர்ந்து வாக்களிக்க வேண்டுமே என்பதுதான்.

மக்களுக்கு முதலில் மனம் மாற வேண்டும். அசூயையும், துவேஷமும் அறவே நீங்க வேண்டும். பிறர் தாழ்ந்து போவதில் சிறிதும் மகிழ்ச்சி கொள்ளா மல், தாங்கள் உயர்வதில் மட்டுமே அவர்களின் கருத்துச் செல்ல வேண்டும் தாங்கள் உயர்வதற்காக, இன்று நல்ல நிலையில் இருப்பவர்கள் அதே நிலையில் இருந்து முதலீடு செய்து, கண்ணும் கருத்துமாய் உற்பத்தி செய்ய வேண்டி யது அவசியம் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். அசூயை சித்தாந்தங்கள் தீவிரமாகப் பிரசாரமாகும்போது இத் தகைய மனமாற்றம் இறைவன் கருணை யால்தான் நடைபெற முடியும்.

# இரு நல்ல முடிவுகள்

'சர்க்கார் உத்தரவுகள் பிறப்பிக்கும் போது, அந்த உத்தரவினால் பாதிக்கப் படும் துறையினரைக் கலந்தாலோசிக்க வேண்டும்; சட்ட சபை அங்கத்தினர்கள் தாங்களே ஸர்வக்ஞர்கள் என எண்ணிக் கொண்டு எல்லா விஷயங்களிலும் தங்கள் மனம் போனபடி சட்டங்கள் நிறைவேற்றக் கூடாது' என்று ராஜாஜி கூறியதிலிருந்து இக் கருத்து அறிஞர் களிடையே வலுப்பெற்று வருகிறது.

இவ்வழியில் மத்திய கல்வி மந்திரி ஸ்ரீ சாக்லா அவர்கள் ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறார். கல்வி நிபுணர் குழு ஒன்றைக் கொண்டு போதனை மொழிப் பிரச்னையை ஆராய்ந்து முடிவு காண வேண்டும் என அவர் உத்தேசித் திருக்கிறார். அவருக்கு நம் பாராட்டுக் களை அளிக்கிறோம்.

இந்த நியாயமான ஏற்பாட்டைச் சில சட்டசபையாளர்கள் எதிர்த்து, தங்களு டைய உரிமையை வெளியாருக்குத் தந் திருப்பதாகக் கண்டனம் செய்திருப்பது வெறும் அகந்தையைத்தான் காட்டு கிறது. தம்மைத்தாமே நிபுணர்களாக நினைத்துக் கொண்டு குருடர் வழிகாட் டப் பின் தொடரும் குருடர்களைப் பற்றி உபநிஷத முனிவர், ''ஸ்வயம் தீரா: பண்டிதம் மன்யமானு: அந்தேனைவ நீயமானு யதாந்தா:'' என்று கூறியது நிகழ்கால ஆட்சி முறையில் நூறு சத விகிதமும் பொருந்துகிறது!

போதனை மொழி விஷயமாக மத்திய மந்திரி ஒரு நல்ல திட்டத்தில் இறங்கியது போலவே ராஜ்ய முதன் மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்களும் ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறார். பல கால மாகவே ராஜாஜி, 'போதனை மொழி என்பது புத்தகங்கள் — அவற்றை விளக் கும் ஆசிரியரின் உரை என்ற இரண்டு அம்சங்கள் கொண்டது; வரையறை செய்து அகில உலகச் செலாவணி பெற்ற பதங்களும் விவரணங்களும் கொண்ட ஆங்கிலப் புத்தகங்களைத்தான் நம் கல்லூரிகளிலும் பின்பற்ற வேண்டும். ஆனால் அவற்றைப் பிரதேச மொழியில் ஆசிரியர்கள் விளக்கிக் கூறலாம்' என்று எழுதி வந்திருக்கிறார். இதே கருத்தை நம் முதன் மந்திரி அவர்களும் வெளி யிட்டு வருவது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

போதனை மொழி தமிழாக வேண்டும் என்போர் ஒன்று நினைவில் வைக்க வேண் டும். அந்தத் தமிழ் ஆங்கிலத்தைவிடக் கொடுமையாகஇருக்கலாகாது. போதனை என்பது வெறும் பிரசங்கமல்ல. விஷயங் களை விளக்குவதே கருத்தாகக் கொண்ட முறையில் அமைய வேண்டும்.

'தமிழில் கல்லூரி போதனை நடக்க வேண்டும் என்பவர்கள் முதலில் தமிழ் மொழியின் வாயிலாகப் பயிலுவதற்கு ஒவ்வொரு கல்லூரிக்கும் ஒரு சில மாண வர்களையாவது சேர்த்துத் தரட்டும்; பிறகு போதனை மொழியை மாற்று கிறேன்' என்று முதன் மந்திரி அழுத்த மாகக் கூறியிருப்பது இவ்விஷயத்தில் அவர் உணர்ச்சி வசமின்றி விவேகத் தின் அடிப்படையிலேயே செயலாற்று வார் என்ற நம்பிக்கையைத் தருகிறது.

போதனை மொழி விஷயத்தில் ஆங்கி லத்துக்கு ஆதரவாக மத்திய கல்வி மந்திரியும், ராஜ்ய முதன் மந்திரியும் கூறும் வாதங்களில் பல ஆட்சிமொழி விஷயத்திலும் பொருந்தும். ஆனால் ஆட்சிமொழிப் பிரச்னையில் ஹிந்தி வாலாக்களின் வெறிக்கு மாற்று யோசனை காண ஏனோ யாருக்குமே துணிவில்லை.



## பம்பாய்ப் பெருவிழா

எந்த சமயத்தையும் வரவேற்கும இந்தியப் பண்புக்கு ஒரு சிகரமாக பம்பாயில் கத்தோலிக்கர்களின் மகாப் பிரசாத மகாநாடு சிறப்பாக நடந்தேறியது.

மகாநாடு நடந்த சித்திராலங்கார மான ஓவல் மைதானத்தைத்தான் மேலே காண்கிறோம்.

நடுவே: இந்தியாவுக்கு வருகை தந்து சிறப்பித்த கத்தோலிக்க மகா குரு போப்பாண்டவர் அவர்களை பம்பாய் விமான நிலையத்தில் இந்தியப் பிரதமரும், உப ராஷ்டிரபதியும், பம்பாய் கவர்னரும் வரவேற்கின்றனர்.

கிரகரி பீடர் கார்டினல் அகாஜியனியன் மகாப் பிரசாத மகாநாட்டைத் தொடங்கி வைக்கும் காட்சியை அடியில் காண்கிறோம்.

# பனாமா

இழுக்க இழுக்க இன்பம் இறுதிவரை






செழுமையான
- வர்ஜீனியாப் புகையிலை
- சீர்சிரவிய கலவை
- புதுமை மயமானது

விசேஷக் கலவை செய்வோர் :
கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட். பம்பாய்.56
பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது

GT. (P) 632 54 Greens' Advtg.

# இலங்கைக் குழப்பம்

ஒரு கட்சியின் போக்கை ஏற்க டியாமல் மனச்சாட்சியை மதித்து கட்சியை விட்டு விலகுவோரைப் ராட்ட வேண்டும். அநுகூலங்கள் ாய்ந்த ஆளும் கட்சியிலிருந்து லகுபவர்களை அதிகம் பாராட்ட ண்டும். இலங்கையில் ஆள்கிற கட்சியி ன்று விலகிய டி. சில்வா இந்த அம்சத் ம் பாராட்டுக்குரியவர்.

தற்போது ஸ்ரீமதி சிரிமாவோ கட்சி ன் பெரும்பான்மை பலம் குன்றிப் ாய் அது ஆட்சிப் பீடத்திலிருந்து றங்க நேர்ந்திருக்கிறது. இனி பாதுத் தேர்தல்கள் நடைபெற்று தன்பின் புதிய அரசாங்கம் ஏற்பட ண்டும். புதிய அரசாங்கம் இலங்கை ந்தியர் பிரச்னையில் எப்படி நடந்து காள்ளுமோ? பொதுவாக நிலைமை ாறுபடாது என்றுதான் பயப்படு கிறோம். பெருமாள் போய்ப் பெரிய பருமாளாகவும் முடியலாம்.

இலங்கை இந்தியர் பிரச்னையில் தற் போது யாவரும் அடிப்படை அம்சத் தைப் பூரணமாக மறந்து போய் இலங்கையில் பிரஜாவுரிமை பெற்றுள்ள இந்தியருக்குத் தனி வாக்காளர் பட்டியல் தயாரிப்பதைக் குறித்து மட்டுமே பிரமாதமாக வாதப் பிரதிவாதங்கள் செய்கிறார்கள். இலங்கை இந்தியர்களின் பிரதிநிதிகளைக் கலந்தாலோசிக்காமலே இந்தியப் பிரதமரும் ஈழப் பிரதமரும் அவர்களை ஜடப் பொருளாக எண்ணிப் பங்கு போட்டுக் கொண்டிருப்பதை அரசியல் தலைவர்களும், பத்திரிகைகளும் மறந்தே போய்விட்டன. இலங்கை இந்தியர் மட்டுமே ஆட்சேபிக்கிறார்கள். எதிர்ப்பை அவர்கள் தீவிரமாக வெளிப்படுத்த வேண்டும். அப்போதுதான் உலக நாடுகள் இந்தப் பிரச்னையின் உண்மையான தன்மையைக் காண முடியும். 'இந்தியர்களை இந்தியா திரும்ப எடுத்துக் கொள்ள வேண்டியதுதானே?' என்று உலக நாடுகள் பல எண்ணுகின்றன. இந்த இந்தியர்கள் சமீபத்தில் இலங்கை சென்றவரல்ல என்பதையும் பல தலைமுறைகளுக்கு முன்பே பாரதத்தை விட்டுச் சென்று இலங்கையை வளப்படுத்தியவர்கள் என்பதையும் அந் நாடுகளுக்கு உணர்த்த வேண்டுமானால் சக்திவாய்ந்த இயக்கம் தேவை.



# அழகு நகரம் உருவாகட்டும்!

ஏழாண்டுகளுக்குப் பிறகு மீண்டும் சென்னை நகரைக் காண நேர்ந்த ஓர் ஆங்கிலேயர் இந்த இடைக்காலத்தில் நகரின் அசுத்தமும், அவலட்சணமும் மதிகரித்து விட்டன; நகர மக்கள் எவ்விதத் துப்புரவு உணர்வும் இல்லாமல் அழகு நகரை அலங்கோல நகரமாக்குகிறார்கள் என்றெல்லாம் காரசாரமாக 'மெயில்' பத்திரிகையில் எழுதியிருந்தார். இதையொட்டி அப்பத்திரிகைக்கு வந்த கடிதங்களில் பெரும்பான்மையானவை அவரது கூற்றை அப்படியே ஒப்புக்கொண்டுள்ளன. இந்தச் சூழ்நிலையில்தான் புது மேயர் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். 'மெயில்' கடிதங்களுக்குப்பின் அவருடைய பொறுப்பை அதிகம் வலியுறுத்த அவசியமில்லை. பதவியேற்றவுடன் அவர், சமீப மழைக்கு 'தாழ்வுற்றுக் குழி விழுந்து தடுமாறி விழுதற்கேற்பப் பாழ்பட்டு நின்ற தாமோர்' சென்னை நகர் சாலைகளை இருபது லட்சம் ரூபாய் செலவில் செப்பம் செய்ய உத்தேசித்திருப்பது மகிழ்ச்சியூட்டுகிறது. புது மேயர் திரு செட்டிபாபுவுக்கும் உதவி மேயர் ஹபிபுல்லா பேக்குக்கும் நல்வரவு கூறி அவர்களின் பெரும் பொறுப்பை நினைவூட்டும் அதே சமயத்தில், சென்னையை அழகு நகரமாக்குவதில் நகர மக்களுக்கு உள்ள பொறுப்பையும் ஞாபகப்படுத்துகிறோம்.





# என்ன சேதி?

## உ. பி.யில் ஹிந்தி

ஹிந்தியைத் தாய்மொழியாகப் பெற்ற பிரதேசங்களே, ஹிந்தியை ஆட்சி மொழியாகப் பயன்படுத்த இயலவில்லை என்ற வாதத்தை முறிப்பதற்காக எப்பாடுபட்டேனும் ஹிந்தியில் நிர்வாகம் நடத்த உத்தரப் பிரதேசம் முனைந்துள்ளது.

உத்தரப் பிரதேச முதன் மந்திரி ஸ்ரீமதி சுசேதா கிருபளானி 1965-ம் வருஷம் ஜனவரி 26லிருந்து சர்க்கார் விவகாரம் முழுவதையுமே ஹிந்தியில் நடத்தத் திட்டமிட்டிருக்கிறார். சட்டங்கள், பிரேரணைகள் இவற்றை அசுர வேகத்தில் மொழிபெயர்க்க உத்தரவிட்டிருக்கிறார். சுமார் 50 சட்டங்கள் மொழிபெயர்க்க 1700 பக்கங்கள் ஆகும். இதில் 350 பக்கங்கள் மொழி பெயர்க்கப்பட்டு விட்டன என்று அம்மையார் பெருமைப்படுகிறார்.

சட்டம் என்பது நுட்பமான விஷயம். அது சென்ற நூற்றைம்பது ஆண்டுகளுக்கு மேலாக ஆங்கிலப் பயிற்சிப்படி ஒவ்வொரு சொல்லுக்கும் இந்தக் குறிப்பிட்ட பொருள்தான் என்று எல்லா நீதிமன்றங்களிலும் உறுதியாகியுள்ளது. இவ்வளவு வளர்ச்சியையும் அனுபவத்தையும் குப்பையில் எறிந்துவிட்டு ஆரம்பக் காலத்துக்குச் செல்வது அறிவீனம்.

## புனித மாதம் பிறக்கிறது!

தேவர்களின் வைகறைப் போதாகக் கருதப்படும் புண்ணிய மார்கழி மாதம் பிறக்கப் போகிறது. யாவரும் திருப்பாவை — திருவெம்பாவை பாராயணம் செய்து பாவங்களைக் களையவேண்டும்.

மார்கழி மாத பஜனை என்றவுடன் சென்னை வாசிகளுக்கு ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களின் நினைவுதான் வரும். இவ்வாண்டும் அவர்கள் தமது முதிர்ந்த பருவத்தைப்பொருட்படுத்தாமல் மயிலையின் நான்கு மாட வீதிகளிலும் காலை ஐந்தரையிலிருந்து ஏழரை மணி வரை கோஷ்டிபஜனை செய்கிறார். அடியார்கள் கலந்துகொண்டு பலன்பெற வேணும்.

மார்கழி மாதத்துக்கென ஓர் அருமையான தொகுப்பைத் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் அளித்திருக்கிறார். மணிவாசகர், தெம்பரசுவாமிகள், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், ஆண்டாள், இராமலிங்க அடிகள், பாரதியார் ஆகியோர் ஈசன் முருகன், திருமால், தேவி இவர்களைப் பள்ளி எழுப்பும் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இதன் வெளியீட்டாளர்: துரை கோதண்டபாணி, 89, லிங்கண்ணச் செட்டித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2, விலை: இருபத்தைந்தே காசுதான்.




## நல்ல காபி தயாரிக்க புத்தம்புதிய பொடியே ஆதாரம்.

# ப்ரூக் பாண்ட் காபி

## எப்பொழுதும் புதியது.

மற்ற காபி பொடிகளுக்கும் ப்ரூக் பாண்ட் காபிக்கும் என்ன வித்தியாசம். ப்ரூக் பாண்ட் காபி உள்ள ஒரு பையை திறந்து பாருங்கள் — விஷயம் புரியும். அது அப்போதே அரைத்த காபிக்கொட்டையின் உண்மையான புது மணம் கமழும்.

பொறுக்கி எடுத்த காபிக்கொட்டைகளே பதமாய் வறுத்து அரைத்து அவைகள் வீசும் இயற்கையான மணத்தை காற்றுப்புகாத அழகான செலோபேன் பைகளில் அடைப்பதே ப்ரூக் பாண்டின் தனிச் சிறப்பு வாய்ந்தமுறை. இப்பொழுதே ப்ரூக் பாண்ட் காபி அருந்தி அதன் புத்தம் புதிய பூரணமான மணத்தை அநுபவியுங்கள்.

---

*நீங்களும் ப்ருக் பாண்டும் சேர்ந்து ஒரு கோப்பை அருமையான காபி தயாரிக்க முடியும். அதன் புதுமையையும் நறுமணத்தையும் ருசித்து அநுபவியுங்கள்.*

---

BBC-7A TAM



# தீனரட்சகர்

**ஆர். வி. கிருஷ்ணய்யர்**

நான் ராஜாஜியை முதன் முதலாகச் சந்தித்து ஐம்பத்தேழாண்டுகளுக்கு மேல் ஆகிறது. அந்த முதல் சந்திப்பிலேயே அவரது விசாலமான இருதயத்தையும் அதில் இடம் கொண்ட மனிதாபிமானத்தையும் அருமையும் உணர்ந்தேன்.

1907ம் ஆண்டு ஏப்ரில் மாதத்தில் ஹைகோர்ட் வக்கீலாக என்னைப் பதிவு செய்து கொண்ட பின் வக்கீல் தொழில் தொடங்குவதற்காகச் சேலத்துக்குச் சென்றேன். அங்கு முன்னணியிலிருந்த வழக்கறிஞர்களில் சிலரைக் கண்டேன். அவர்கள் யாவரும், 'வக்கீல் தொழிலில் ஏற்கெனவே ஒரே நெரிசல். பட்டப் பரீட்சைகளில் சிறப்பாகத் தேறியுள்ள நீ சட்டப் படிப்பு இல்லாமலே சௌகரியமான சர்க்கார் உத்தியோகம் பெற்றிருக்கலாமே. ஏன் சட்டத் துறையில் இறங்கினாய்?' என்றே கேட்டார்கள். ஆயினும் நான் மனம் தளரவில்லை. ராஜாஜியைக் காணச் சென்றேன்.

அவர் வக்கீல் தொழில் தொடங்கி அப்போது ஆறு அல்லது ஏழு ஆண்டுகள் தான் இருக்கும். ஆனாலும் தொழிலில் மிகப் புகழ் பெற்று, அமோகமான சம்பாத்தியம் பெற்று, ஒரு ஸீனியர் வக்கீலாகவே கருதப்பட்டார். நான் அவரை முதலில் சந்தித்தபோது அவர் கூறிய வார்த்தை புண்ணுண்ட என் உணர்ச்சிகளுக்குக் குளிர்ந்த அஞ்சனம் பூசினாற்போல் இருந்தது.

'சௌகரியமான சர்க்கார் உத்தியோக நில் சபலம் கொண்டு விடுவீரோ என பயந்தேன். அப்படிச் செய்யாததில் சந்தே ஷம். திறமைசாலிகளுக்குச் சட்டத் து ையைப் போல் வேறெதுவும் இடமளிப்பதில் சேலம் போன்ற சிறிய நகரில் ஸீனிய வக்கீல்கள் தமக்கு ஜூனியர்களை வைத்து கொண்டு நிதி உதவியோ, தொழிலுதவியோ செய்ய அவசியமில்லை. என்றாலும் என் லியன்ற அளவுக்கு உமக்கு எல்லாவித உத மும் அளிப்பேன்' என்றார் ராஜாஜி.

சொன்ன சொல்லை அப்படியே காப்பா றினார். முன் பின் தெரியாத என்னை நண் ளுக்கிக் கொண்டு, நான் சேலத்திலிருந் காலம் முழுவதிலும் அதாவது 1907-லிருந் 1910 வரை அவர் என்மீது பொழிந் அன்பை நான் என்றும் மறக்க முடியாது அத்தகைய உண்மையான மனிதத் தன்ம வாய்ந்தவர் ராஜாஜி.

1906ம் ஆண்டு காங்கிரஸில் ஒரு பிரி தோன்றியது. தீவிரவாதிகள், மிதவாதிக என இரு கோஷ்டிகள் உண்டாயின. மி வாதிகளை வசமாக்கிக் கொண்டு தீவிரவா களை அடக்குவதே பிரிட்டிஷ் சர்க்காரி கொள்கையாயிற்று. சர்க்காருக்குச் சிறிது அஞ்சாமல் ராஜாஜி சேலத்தில் தீவிரவா களின் தலைவராக இருந்தார். தலைவர் என் சொன்னால் மட்டும் போதாது. சேலத்தி

ı அரசியல் நடவடிக்கைகளுக்கும் அவரே
நம் ஆன்மாவும் எல்லாமுமா யிருந்தார்.
8ல் மிதவாதிகள் சென்னையில் காங்கிரஸ்
'நாடு நடத்தத் தீர்மானித்தார்கள். மித
நத்தை ஆதரிப்பதாக உறுதிக் கையொப்
இடுபவர்களையே மகாநாட்டுக்கு அநு
ப்பதென முடிவு செய்தார்கள். இவ்வாறு
ுதிக் கையொப்பம் வாங்குவதை ராஜாஜி
்சேபித்தார். சேலம் ஒரு பிரதிநிதியைக்
. மகாநாட்டுக்கு அனுப்பவில்லை. காலஞ்
ன்ற மகா கனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரி
ர்களே சேலத்துக்கு வந்து மிதவாதக்
சி தொடங்க முயற்சி செய்து தோற்றுப்
ானுர். காரணம் ராஜாஜியே.

இந்தக் காலத்திலேயே ராஜாஜி பல
ியத் திட்டங்களைச் செயல்படுத்தலானுர்.
ந்தத் திட்டங்கள் **இதன் பிறகுதான் காங்
ஸின் செயல் முறைகளிலேயே இடம்
ற்றன** என்பது குறிப்பிடத் தக்கது.

உதாரணமாக, ஹரிஜன முன்னேற்றப்
ணியை ராஜாஜிதான் முதலில் ஆரம்பித்
ார். பெரும் எதிர்ப்பைப் பொருட்படுத்
ாது அவர் ஹரிஜன நல இயக்கம் ஒன்றைத்
தாடங்கி, சேலம் நகர சபை உயர்நிலைப்
ள்ளியில் தமது செலவில் ஹரிஜன மாணவர்
ளைச் சேர்த்துப் படிக்க வைத்தார். அவரு
டைய தூண்டுதலின்பேரில் சேலத்தின் பல இளை
ஞர்கள் ஹரிஜன சேவையில் ஈடுபட்டனர்.

கதர் அப்போது வழக்கத்தில் இல்லை.
னினும் ராஜாஜி சுதேசித் துணிகளையே
ணிய வேண்டுமென்பதை ஆதரித்து ஒரு
தேசிக் கடை திறந்து வைத்தார்.

ிவில் பிரிவின் கீழ் வரும் சச்சைகளை
சோரிப்பதற்காக அவர் காலஞ்சென்ற பி.வி.
ரசிம்ம ஐயருடன் சேர்ந்து வரையறை
செய்த ஒரு டிரிபியூனல் நிறுவினர். நீதி
ன்றத்தின் எல்லா அம்சங்களும் பொருந்திய
இந்த டிரிப்யூனலில் உத்தியோகச் சார்பில்
லாத பல பெருமக்கள் பணி செய்தனர்.

வட இந்தியா செல்லும் தென்னிந்தியர்
களின் சௌகரியத்துக்காக ராஜாஜி ஹிந்துஸ்
தானி வகுப்புக்கள் ஏற்பாடு செய்தார்.

சேலத்திலுள்ள சிறுவர்களிடையே பாரதி
யாரின் பாட்டுக்களைப் பிரசாரம் செய்தார்.

தமிழில் ஸயன்ஸ் — பிரதிபதங்கள் தயா
ரிப்பதற்காக ஒரு சஞ்சிகை நடத்தினுர்.

காந்திஜி, திலகர் இவர்களைப் பற்றி
ராஜாஜி மதிப்புடன் பேசி வருவார். எனவே
காந்திஜி தென் ஆப்பிரிக்காவிலிருந்து இந்தி
யாவுக்குத் திரும்பி வந்து, ஒத்துழையாமை
இயக்கம் தொடங்கிய உடன் ராஜாஜி
அவரது முதல் சீடர்களில் ஒருவரானுர்.

உரிய காலம் வந்ததும் ராஜாஜி வக்கீல்
தொழிலையே விட்டார். இதைத் தியாகம்
என்று சொல்வது வெறும் வார்த்தையில்லை;
நூறு சத விகிதமும் சத்தியமாகும். அந்தக்
காலத்தில் ராஜாஜி ஆயிரம் ரூபாய்க்கு மேல்
பிரதி மாதமும் சம்பாதித்தார். சேலம் நகர
சபை சேர்மனுகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, உத்
தியோகஸ்தர், மக்கள் யாவராலும் பெரிதும்
மதிக்கப்பட்டவர் அவர். மேலும் திடமான
தேகாரோக்கியமும் வாய்க்கப் பெறுதவர்.
பங்களா வாசமும், ஏவலாள் படையும், சொந்
தச் சாரட்டுமாக வாழ்ந்தவர். சுக வாழ்க்
கைக்கே பழகிய அவர் திடீரெனத் தொழிலை
விடுவது சாமானியமான செயலா? தொழிலை
விட்டதோடன்றி, மும்முனை பகிஷ்கரிப்பின்
கீழ், தமது மக்களின் படிப்பையும் நிறுத்
தினுர். பிற்பாடு அவர் சிறை புகுந்ததைத்
தேசமறியும். அவரை விட மேலான தியா
கம் செய்த தலைவர் யாருமே கிடையாது.

**ரா**ஜாஜியின் அரசியல் வாழ்வு முழுவதும்
ஏழைகளின் பொருட்டே அர்ப்பணமானது.
ஏழைகளின் நலனில் கருத்தில்லாமல், தனிகர்
நலனுக்காகவே ராஜாஜி பாடுபடுவதாகக் குற்
றம் சாட்டும் பலர் இன்று இருக்கிறார்கள்.
இது அபாண்டமாகும். விஷயம் அறியாதவர்
களை இம்மாதிரிப் பிரசாரம் தவறான வழி
யில் இழுத்துச் செல்லுமாதலால், ஒருகாலும்
மறக்கவொண்ணுத அவரது தீன ரக்ஷணத்
திருப்பணிகளை வலியுறுத்துகிறேன்.

முன்பே சொன்னதுபோல், நமது ராஜ்யத்
தில் ஹரிஜன முன்னேற்றத்தைத் தொடங்கி
வைத்தவர் ராஜாஜிதான்; அந்த இயக்கத்
தில் தலைசிறந்த தொண்டரும் அவரே.
ஹரிஜனங்களுக்கிருந்த சில சமூகத் தடை
களைச் சட்டத்திலிருந்து நீக்குவதற்காக,
காலஞ்சென்ற ஹரிஜனத் தலைவர் எம். ஸி.
ராஜாவுக்கு ராஜாஜி மகத்தான உதவியும்
ஊக்கமும் அளித்தார். தாமே பதவிக்கு
வந்தவுடன் அவர் முதல் காரியமாக ஆலயங்
களை ஹரிஜனங்களுக்குத் திறந்து வைத்
தார். இந்தத் துணிச்சலான சீர்திருத்தம்,
ஹரிஜனங்களுக்கு ஜாதி ஹிந்துக்களுடன்
சரி சமமான அந்தஸ்து அளித்ததுடன்
ஹிந்து சமூகத்திலிருந்த உயர்வு தாழ்வுப் பிரி
வினையையும் கெல்லி எறிந்தது.

ராஜாஜி தீண்டாமை ஒழிப்புக்காகச்
செய்த பணி முழுமை பெற்றதற்குக் கார
ணம், அதனை யொட்டி அவர் ஹரிஜன
மக்களின் கல்விக்கும் பொருளாதார உயர்
வுக்கும் வழிகள் வகுத்து, அவர்களுடைய
பழக்க வழக்கங்களையும் சீர்திருத்தியதுதான்.
இவ்வகையில் ராஜாஜி ஹரிஜனங்களுக்கு
மட்டுமின்றி, எல்லா ஏழை மக்களுக்கும்
செய்த பெருந்தனி மதுவிலக்கை அமுல்
செய்ததாகும். மதுவிலக்குக்கு ராஜாஜி செய்
துள்ள ஈடு இணையற்ற தொண்டினை அறிய
வேண்டுமாளுல், 1931ம் ஆண்டில் அவர்
மதுவிலக்கு பற்றி வெளியிட்ட சிறு நூலின்
முகவுரையில் ஜவாஹர்லால் நேரு அவர்கள்
கூறியிருப்பதைப் பார்க்க வேண்டும். ''ராஜ
கோபாலாச்சாரியார் மதுவிலக்குத் துறையில்
விசேஷ நிபுணர் என்பது யாவரும் அங்
கீகரித்த விஷயம். **இந்தியாவின் மதுவிலக்கு
இயக்கத்துக்கு அவரே தனித் தலைவர்** என்
பது சந்தேகத்துக்கிடமில்லாத உண்மை''
என்கிறார் ஸ்ரீ நேரு.

மதுவிலக்கால் ஏழைகளின் பொருளாதார
மும், பழக்க வழக்கமும் எப்படிச் சிறப்பாக
மாறின என்பதற்கு ராஜாஜியின் ஆட்சி
முடிந்த பின் ஏற்பட்ட அட்வைஸரி சர்க்
காரின் நிர்வாக அறிக்கைகள் (Administration
reports) சான்று கூறுகின்றன. பிற்பாடு
மதுவிலக்கை ரத்துச் செய்த அட்வைஸரி
சர்க்காரே இந்தச் சிறப்பான மாற்றத்தைக்
கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

ஏழைக் குடும்பங்களிடம் உணவுக்காகவும், உடைக்காகவும் செலவழிப்பதற்கு முன்னைக் காட்டிலும் அதிகப் பணம் இருக்கிறது; முன்னம் ஏழைகள் பட்டிருந்த கடனைத் தீர்க்கவும் நகை நட்டு வாங்கிக் கொள்ளவும் சேமிக்கவும் வசதி உண்டாகியுள்ளது; குடும்ப வாழ்க்கையில் முன்னைவிட இணக்கம் உள்ளது — என்றெல்லாம் இந்த நிர்வாக அறிக்கைகள் கூறுகின்றன.

இன்று ஏழை மக்களின் வாழ்நிலையில் ஏதேனும் அபிவிருத்தியிருக்குமாயின் அதற்கு முக்கிய காரணங்களில் ஒன்று ராஜாஜி அமுல் செய்த மதுவிலக்குத் திட்டம் என்று ஐயமறக் கூறலாம். மதுவிலக்கை மட்டும் ரத்துச் செய்யாமல் அதன் பின் எத்தனை ஐந்தாண்டுத் திட்டங்கள் போட்டாலும், பழைய வறுமையும், துன்பமும், அசுத்தமுமே புத்துயிர் பெறும்.

நேரட்சகராக ராஜாஜி செய்த சேவைகளில் கைத்தறிக்காக அவர் புரிந்த உதவியைக் குறிப்பிட வேண்டும்.

கதர் திட்டத்துக்கு அவர் செய்த பிரசாரத்தினால் பலனடைந்த ஏழைகள் எவ்வளவோ பேர்.

விவசாயக் கடன்களை ஒத்தி வைத்ததன் மூலம் உழவர்களைப் பண்ணையார்கள் கொடுமைப்படுத்தாத வண்ணம் காப்பாற்றியவர் ராஜாஜியே.

பண்ணையாருக்கும், குத்தகைதாரருக்கும் மகசூலில் 40–60 என்ற விகிதத்தை விதித்து அவர் செய்த உபகாரம் இணையற்றது.

1952–53 ஆண்டுகளில் சென்னை முதன் மந்திரியாயிருந்தபோது ராயலசீமையில் பஞ்சத்துக்கு ஆளான மக்களுக்கும், கோதாவரி-கிருஷ்ணா மாவட்டங்களில் வெள்ளக் கஷ்டத்துக்கு ஆளானவர்களுக்கும் அவர் அளித்த தாராளமான அரசாங்க உதவி அவர் எத்தகைய அநாத பந்து என்பதை நிரூபிக்கின்றன.

இதைப் போன்ற சேவைகளை விரிக்க விரிக்கப் பெருகிக் கொண்டே போகுமென்பதால் விட்டு விடுகிறேன். இப்போது சொல்லுங்கள்: ராஜாஜியைக் காட்டிலும் ஏழை மக்களுக்கு அதிகமான நன்மை செய்த இந்தியத் தலைவர் யாரேனும் உண்டா?

**ரா**ஜாஜியின் வாழ்வு முழுவதிலும் அசாதாரணமான தீர்க்க தரிசனம், தீரம், திட சங்கல்பம், தேச சேவை, புலனடக்கம், இவற்றைக் காண்கிறோம். ஜவாஹர் அவர்கள் தமது சுய சரிதையில் ராஜாஜியைப் பற்றிக் குறிப்பிடுவதாவது: "அவரது புத்தி சக்தியும், தன்னலம் கருதாப் பண்பும், பிரச்னைகளை ஆழ்ந்து நோக்கி அலசும் ஆற்றலும் நமது நோக்கத்துக்கு ஒரு மகோன்னதமான செல்வமாகும்." 'நமது நோக்கம்' என்று அவர் சொல்வது 1940ம் ஆண்டில் காங்கிரஸின் நோக்கம் எதுவோ அதுவே.

இந்திய நாடு — முக்கியமாகத் தமிழகம் — ராஜாஜியிடம் என்றும் நன்றிக் கடன் கொண்டிருக்குமாறு அவர் செய்துள்ள அரும் பணிகளில் மேலும் ஐந்தினை விசேஷமாகச் சொல்ல வேண்டும்.

1. மதுவிலக்கால் சர்க்கார் வருமா குறைந்ததால் அதனை ஈடு செய்வதற்கு ராஜாஜி விற்பனை வரி விதித்தது. பலர் எதித்தும் அவர் தன்னம்பிக்கையுடன், த அறிவுத் திறனைக் கொண்டு விற்பனை முறையை விவரமாகவும், நுணுக்கமாக அமைத்து வெற்றி கண்டார். அவர் மி குறைந்த விகிதத்தில் விதித்த வரியை அ வுக்கு மீறி உயர்த்தியது பிற்பாடு வந்த களின் காரியம். எப்படியாயினும் இந்தக் கா தேனு இல்லாவிடில் செலவை ஈடுகட்டுவ ராஜ்ய சர்க்கார்களால் இயலவே இயலாது.

2. 1952ம் ஆண்டுப் பொதுத் தேர்தலி சென்னை ராஜ்யத்தில் 375 சட்ட ச ஸ்தானங்களில் காங்கிரஸ் 152தான் பெ றது. முதன்மந்திரி ஸ்ரீ குமாரஸ்வாமி ராஜ உள்படப் பலர் தோல்வியுற்றனர். இ ராஜ்யத்தில் காங்கிரஸ் கட்சி மரணத்தி விளிம்பு வரை சென்று விட்டது. ராஜா ஒருவர்தான் காங்கிரஸைக் காப்பாற் அரசாங்கத்தை ஸ்திரப்படுத்த முடியு என்று கட்சித் தலைவர்கள் கருதி, ஆட்சி கடிவாளத்தை அவர் ஏற்றுக் கொள் வேண்டுமென ஏகமனதாகக் கோரினார்கள் மத்திய சர்க்காரிலிருந்து மந்திரி பதவிை விட்டு, அப்போதுதான் ஓய்வு கொண் ராஜாஜி வரவிருக்கும் இடர்ப்பாடுகள் உணர்ந்திருந்தார்; கட்சியின் உட்பூசல்கள் அறிந்திருந்தார். எனினும் இதனைக் கடமை யின் அழைப்பாகக் கருதி முதன் மந்திரி பொறுப்பை ஏற்றார். அப்போது ஸ்ரீ சி சுப்பிரமணியம், "நமது ராஜ்யத்தில் சமீ காலத்தில் நிகழ்ந்த தலைசிறந்த அரசியல் நிகழ்ச்சி இதுவே" என்றார்.

ராஜாஜியினால் காங்கிரஸ் இந்த ராஜ்யத் தில் புத்துயிர் பெற்றது ஒருபுறம் இருக்கட் டும். அவர் அப்போது தலைமை ஏற்றதாலேயே கம்யூனிஸ்டுகளின் கண்ணியிலிருந்து தமிழகம் தப்பியது. அவர் தலைமை கிடைத்திராவிடில் இன்று ராஜ்யத்தின் நிலை என்னவாயிருக்கும், இதனால் தேசத்திலேயே எத்தகைய எதிர் விளைவுகள் ஏற்பட்டிருக்கும் என்பதை எண்ணிப் பார்க்கவும் இயலவில்லை.

3. சென்னை மாநகரைத் தமிழகத்துக்குக் காத்துத் தந்ததும் ராஜாஜியின் தனிப்பெரும் முயற்சிதான். அதனால் ஆந்திரர்கள் ராஜாஜியிடம் அடைந்த ஆத்திரத்தை யாவரும் அறிவோம். 'நல்ல பெயர் எடுக்க வேண்டும்' என்பதைவிட 'நல்லதையே செய்ய வேண்டும்' என்பதைக் கருதி ராஜாஜி சென்னை நகரத்தின் நியாயமான எதிர்காலத்தைத் தீரமாக நிர்ணயம் செய்தார்.

4. தமிழ் நாட்டுப் படிப்பாளருக்குத் தாய் மொழியில் ஈடுபாடு ஏற்படுத்தித் தந்த பெருந் தூண்டுகோல் ராஜாஜியே. தமிழ் இலக்கியத்துக்கு அவர் செய்துள்ள பணி மகத்தானது. அவரது தாய்மொழிச் சேவையைத் தமிழ் நாடு என்றும் மறக்க முடியாது.

5. ஹிந்தியை அகில இந்திய ஆட்சி மொழியாக்கி மற்ற மொழியாளரை இரண்டாம்தரப் பிரஜையாக்குவதைத் தற்போது அவர் வன்மையாகக் கண்டிக்கிறார். இதுவும் தமிழகத்துக்கு அவரது தலைசிறந்த தொண்டுகளில் ஒன்று.

இலக்கியத்தில் மட்டுமின்றிப் பல்வேறு துறைகளில் ராஜாஜி தேர்ந்த ஞானம் படைத்தவர். பி. ஸி. ஜி., கதிரியக்கம், இதய வியாதி, டிக்கென்ஸ் நவீனம், அத்வைத சாஸ்திரம் இவை யாவற்றைக் குறித்தும் ஒரே பாங்கில் விவாதிக்க வல்லவர் அவர். அவரது எழுத்து நடை தெளிவும், எளிமையும், எழிலும் கொண்டது. அவரது ஹாஸ்யமும் உவமைகளும் மனோரஞ்சகமாகவும், அதே சமயம் அறிவூட்டுவனவாகவும் உள்ளன.

அரசியல் என்பதைத் தனியாக வைத்துப் பாராமல், சமூகச் சீர்திருத்தத்தோடு இணைத்து நல்வழியில் சாதனை புரிந்தவர் ராஜாஜி.

மந்திரி பதவி வகிக்கும் போது அவர் நிர்வாகத்தில் நிலைநாட்டிய நேர்மை ஓர் அரிய உதாரணமாகும். இது காரணமாகவே ஆங்கிலேய உயர் அதிகாரிகள் உள்பட யாவரும் அவரிடம் பெருமதிப்பு வைத்து அவர் வார்த்தையைக் கேட்டனர். தெய்வ மனிதராகிய அவர் எல்லாத் துறைகளிலும் தர்மத்தை விரும்புபவர். எனவே, அரசாங்க நிர்வாகத்தில் அவர் மிகச் சிறந்த நன்னடத்தையை எதிர்பார்த்ததில் வியப்பில்லை. ஊழல் விவகாரங்களுக்கு அவரால் உடன்பட முடியாததனால்தான் அநேக அரசியல் வாதிகள் அவருக்கு எதிர்ப்பாகக் கிளம்பினர். அவர் அதையும் பொருட்படுத்தவில்லை. ஒரு முறை அவர் சட்டசபையாளரிடம் பேசுகையில், ''நீதி மன்றங்களை அரசாங்க நிர்வாகத்திலிருந்து பிரித்தாகிவிட்டது; நான் சட்டசபையையும் நிர்வாகத்திலிருந்து பிரிக்க விரும்புகிறேன்'' என்றார். சட்டசபையாளர் அதிகாரிகளின் நிர்வாகத்தில் குறுக்கிடக் கூடாது என்பதே இதன் கருத்து. எந்தச் சிறிய விஷயத்திலும் அரசாங்கத்தில் ஏமாற்றுதல்களுக்கு இடமே இருக்கலாகாது என அவர் கருதினார். ஆஸ்தான கவிகள் நியமிப்பதை அவர் நிறுத்திய போது இதனால் என்ன லாபம் என்று சிலர் கேட்டார்கள். ''முகஸ்துதி செய்யக் கூடியவர்களுக்கு ஊக்கம் தருவதை நிறுத்துவதே லாபம்தானே?'' என்றார் ராஜாஜி.

நிகழ்கால அரசாங்கம் பற்பல விதங்களிலும் தேசத்தை சர்வநாசத்துக்கு அழைத்துச் செல்வதாக அவர் கருதுகிறார். ஏகபோகத் தொழில் சலுகை, பெர்மிட் லைசென்ஸ் வலை, தாங்க முடியாத வரிப் பளு, சாஸனம் தந்த சுதந்திரங்களின் அழிவு, லஞ்ச ஊழல், டம்பச் செலவுகள், நிர்வாகத் திறமையின்மை இவை யாவற்றுக்கும் ஆட்சியாளரின் இனம் தெரியாத சோஷலிஸ சித்தாந்தமே காரணம் எனக் கண்டு அதனை வலுவாகவும், தர்ம நியாயமாகவும் எதிர்க்கிறார்.

எந்தக் கட்சி ஆட்சியில் இருப்பினும், ஜனநாயகத்தின் ஓர் இன்றியமையாத அம்சமாக வலுவாய்ந்த எதிர்க் கட்சி இருத்தல் வேண்டும். எனவே, ஆளும் கட்சிக் கொள்கைகளுக்கு நேரெதிரான கொள்கைகளோடு, சோஷலிசச் சார்பில்லாத எதிர்க் கட்சி தேவைப்பட்டபோது, அதனைப் பூர்த்தி செய்யவே ராஜாஜி சுதந்திரக் கட்சியை ஸ்தாபித்தார்.

தமது அசாதாரணமான மேதாவிலாசம் காரணமாக அவர் புதுக் கட்சிக்கு உலகம் தழுவும் பொதுப் பெயராக 'சுதந்திரக் கட்சி' என்று பெயரிட்டார். சர்வ தேசங்களிலும் நடைமுறைக்கு ஒவ்விய அரசியல் சித்தாந்தங்களாகக் கட்சிக் கொள்கைகளை வகுத்தார். மூல சாஸனம் அளித்த சுதந்திரங்களை நாடு பெற்று உண்மை ஜனநாயகமாக வாழவே சுதந்திரக் கட்சி அமைத்துள்ளார்.

இந்தியாவில் உண்மையான ஜனநாயகம் நிலைபெறாவிடில், உலகிலேயே ஜனநாயக வாழ்முறைக்கு ஆபத்து நேரும். எனவே, ராஜாஜி சுதந்திரக் கட்சி தொடங்கி, நடத்தி வருவதன் மூலம் உலக முழுவதிலும் ஜனநாயகம் வாழ்வதற்கு வழி கண்டு வருகிறார். மக்களை சர்வாதிபத்தியத்திலிருந்து விடுவித்து, விடுதலை வாழ்வுக்கு இட்டுச் செல்வதற்காக அவர் கட்சித் தலைமை தாங்கி வருவது அவரது தொண்டுகளுக்கு எல்லாம் சிகரமாகும்.

ராஜாஜி வெறும் அரசியல்வாதியோ, ராஜநீதி நிபுணரோ மட்டுமல்ல. அவர் உலகின் நிகழ்கால விவகாரங்களில் மட்டும் சிரத்தை கொண்டவரல்ல. மனித குலத்தின் அடிப்படைப் பிரச்னைகளான சாசுவத சத்தியங்களை ஆய்ந்து அறிவுரை கூறுபவர்.

கீதை கூறும் ஸ்தித ப்ரக்ஞனின் பூரண லக்ஷணமும் பொருந்தியவர் ராஜாஜி. இந்தியப் பண்பாட்டின் எல்லா அம்சங்களுக்கும் அவர் பிரதிநிதி. ரிஷிகளுக்கும், சமயாசாரியர்களுக்கும் ஒப்பானவர். கண்ணபெருமான் போல் உலக ஆசானாகவும், உலக ராஜநீதி நிபுணராகவும் ஒருங்கே விளங்குபவர். அவர் நீண்ட காலம் வாழ்ந்திருந்து நாம் விரும்பும் சுதந்திர சுபிட்ச வாழ்வு நாட்டில் ஸ்தாபிதமாகி, மக்கள் அனைவரும் எவ்வித மன மாறுபாடுகளுமின்றிச் சுத்தமான உள்ளத்தோடு தரும வழியில் செல்லும் நன்னாளைக் காண வேண்டும் என இறைவனிடம் பிரார்த்திப்போம்!

# கந்தன் கருணை

## 6. தவம் பலித்தது!

மன்மதன் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டான்! சிவபெருமான் முன் போலவே மோனத் திருக்கோலத்தில் எழுந்தருளி விட்டார். தேவர்களின் உத்தேசமெல்லாம் வியர்த்தமாகி விட்டது! உள்ளம் கலங்கினார்கள். கலக்கத்துக்குப் பின் தெளிவு பிறந்தது; விவேகமுண்டாயிற்று. 'பெருமானின் மோன நிலையை எதிர்ப்பு உபாயத்தினால் மாற்ற முடியாது; பிரார்த்தனை ஒன்றுவேயே மாற்றமுடியும்' என்று அவர்கள் தெரிந்து கொண்டார்கள்.

கயிலை மலை கோபுரத்தின் அருகே வானவர்கள் நின்று கரங்களைக் கூப்பிப் பிரார்த்தித்தனர்.

''தேவர்களே! வருந்தாதீர்கள்! உங்கள் பொருட்டு, இமய மால்வரையில் தவம் புரியும் மரகதவல்லியை மணந்து துயரைக் களைகின்றோம்'' என்று சிவபெருமான் அருள்மொழி கூறினார்.

தேவர்கள் முறையிட்டுக் கொண்டவுடன், சிவபெருமான் அவர்களுக்கு அருள் புரிந்ததைக் கண்ணுற்ற ரதிதேவி, கண்ணுதற் கடவுள் முன் வந்து வணங்கி, ''தேவர்கள் தூண்டுதலால் தான் என் பதி மன்மதன் தங்கள் மீது மலர்க் கணைகளை ஏவி அழிந்தார். அவர் செய்த குற்றத்தை மன்னித்து எனக்கும் அருள் புரிய வேண்டும்'' என்று முறையிட்டுக் கொண்டாள்.

''குழந்தாய்! பார்வதியை மணம் புரியும் காலத்து மன்மதனை உயிர்ப்பித்துத் தருவோம்'' என்று சிவபெருமான் கருணைபாலித்தார். ரதிதேவி எம்பெருமானைப் போற்றிக் கயிலை மலைச்சாரல் சென்று உண்ணாமலும் உறங்காமலும் மாதவம் செய்யலானாள். மேகத்தின் வரவுக்காக எதிர்நோக்கி ஏங்கும் மயிலைப் போல் உமாதேவியாரின் திருமணத்தை எதிர்நோக்கினாள் ரதி.

உமாதேவியும் மேகத்தை நோக்கி ஏங்கும் மயில் போல ஐயனுக்காக ஏங்கித் தவமியற்றிக் கொண்டிருந்தார். ஏக்கங்களை நீக்கும் காலம் வந்தது. சனகாதி முனிவர்க்கு மோன அநுபவத்தை உணர்த்தி ஞானபோதனை நிறைவுசெய்து, தக்ஷிணாமூர்த்தித் திருக்கோலத்தினின்றெழுந்தார் ஐயன்.

கிழ அந்தணர் ஒருவர் அம்பாளின் தவச்சாலைக்குச் சென்றார். தவச் சாலையைக் காத்து நின்ற பெண்களிடம் ''தவம் செய்யும் பார்வதியைப் பார்ப்பதற்காக வந்தேன்'' என்று கூறினார்.

சேடிகள் உமாதேவியாரிடம் அவரை அழைத்துச் சென்றனர். கிழ வேதியரது திருநீறு பூசிய மேனியைக் கண்ட பார்வதி, 'இவர் எம்பிரானுடைய அடியவர்' என்று பக்தியுடன் வழிபாடு செய்தார். அம்பிகையின் தோழி விசயை ஆசனம் ஒன்றைப் போட்டு அதில் அந்தணரை அமர்த்தினாள்.

வேதியர் அம்பிகையை அன்புடன் பார்த்து, ''சின்னஞ்சிறு வயதில் உன்



திருமுருக கிருபானந்த வாரியார்

நகைக் கெடுத்துக் கொண்டும் உடலே
ரட்டிக் கொண்டும் யாரைக் குறித்து
ர தவம் செய்கிருய் பெண்ணே ?''
ன்று கேட்டார்.

பார்வதி விசயையைப் பார்த்து. இவருக்கு நீ விடை சொல்'' என்று
றிப்பால் கண் காட்டினர். பத்தினிப் பண்ணுக்கு நாயகன் பெயரைச் சால்ல மட்டும் நாணமில்லே; அவனேப்
ற்றிப் பேசுவதே நாணம். தேவி நமது பண்மக்களுக்கே காட்டிக் கொடுத்த
ண்பு இது.

''சுவாமி! பரமேசுவரரைக் குறித்து
)வர்கள் தவம் செய்கிருர்கள்'' என்று
ிசயை கூறினுள்:

விசயை கூறியதைக் கேட்ட
டன் ஏதோ பெரிய விசித்திரத்
தைக் கேட்டாற்போல் தொண்டு
)ழவர் குலுங்கக் குலுங்கச் சிரிக்க
லானுர்.

''சுவாமி! ஏன் சிரிக்கிறீர்கள் ?''
என்று பார்வதி கேட்டார்

''பார்வதி! மாலும் அயனும் காண முடியாத அந்தக் கடவுள் உன் தவத்துக்கு இரங்கி வருவாரா? சந்திர மண்டலத்திற்கு ஏணி வைத்தால் எட்டிவிட முடியுமா? நீ வீணுக உடல்நலத்தையும், கட்டழகையும் பாழாக்கிக் கொண்டு தவம் செய்ய வேண்டாம். உன்னுல் சிவபெருமானேக் காண முடியாது'' என்ருர் அந்தணர்.

அந்தணரின் பேச்சு எம்பிராட்டிக்குக் கோபத்தை உண்டாக்கியது. 'அயனும், மாலும் போல் அகந்தையாலா ஆண்டவனே அடைய விரும்புகிறேன்? அன்பாலல்லவா அவனேப் பெற முயல்கிறேன்? அடியாரின் உள் அன்பினே ஆண்டவன் எப்படி மதிக்கிருன் என்பதை அறியாதவராக அல்லவா இருக்கிருர் இக்கிழவர்?' என்று தேவி எண்ணிச் சினம் கொண்டார்.

''பெரியவரே! தங்களுக்கு வயதுதான் ஆகியதே தவிர அறிவு முதிர்ச்சி பெறவில்லே! என்னுடைய இத்தவத்தால் சிவபெருமானே அடைய முடியாது என்ருல் அதனுல் சிவபெருமானேயும் விடுவதற்கில்லே; தவத்தையும் விடுவதற்கில்லே. இப்போது நான் செய்யும் தவத்தின் தீவிரம் போதாது என்று கருதி அதனே மேலும் கடுமையாக்குவதே வழி. அதில் என் உயிரே போனுலும் சரி'' என்ருர்.

முடிவிலாதுறை பகவன்என்
வேட்கையை முடியாது
விடுவன் என்னினும் தவத்தினே
விடுவனே மிகவின்னம்
கடிய நோன்பினே அளப் பில
செய்துயிர் கழிப்பேன்நான்
நெடிது மூத்தவின் மயங்கினே
பித்தனே நீஎன்ருள்



''இனித் தண்ணீரும் அருந்தாமல் தவம் செய்வேன்; ஒற்றைக் காலில் நின்று தவம் செய்வேன்; பஞ்சாக்கினி நடுவே தவம் செய்வேன்; ஆயிர மாயிரம் பிறப்புக்கள் எடுத்துத் தவம் செய்வேன்'' என்று அம்பிகை கூறினார்.

அம்பாளுக்கு எவ்வளவு உறுதி பாருங்கள்! பிள்ளை வரம் வேண்டி விரதம் இருக்கும் ஒருவன் ஐந்து கிருத்திகைகளில் முருகன் கோயிலுக்குச் சென்று வேண்டுதல் நிறைவேறாவிடில் கோயிலுக்குச் செல்லுவதை நிறுத்தி விடுவான். அதற்கும் மேல் சுவாமியையே பழிக்கத் தொடங்குவான்! ஆனால் அம்பாளோ, தவத்தின் பலன் கிடைக்காவிடின், அது முறைப்படி நோன்பு காக்காத தம் தவறே எனக் கருதினார்!

வைத்தியக் கல்லூரியில் இடம் பிடிப்பதற்குத் தகுந்தவரைப் பார்க்கவே இந்தக் காலத்தில் எளிதில் முடிய வில்லையே! சுவாமியைப் பார்ப்பது அவ்வளவு சுலபமா?

''பெண்ணே! அது சரி, பரமேசுவரனை நோக்கித் தவம் செய்கிறாயே, என்ன வரம் கேட்கப் போகிறாய்?'' என்று அடுத்தபடியாகக் கேட்டார் அந்தணர்.

''திருமணம்......'' என்று வெட்கத்துடன் கூறினார் அம்பிகை.

''பைத்தியக்காரப் பெண்!'' என்று ஏளனமாகச் சிரித்தார் அந்தணர். ''பெண்ணே! திருமணம் புரிந்து கொள்வதற்கு நல்ல மணப் பிள்ளையைத் தேர்ந்தெடுத்தாய். இடுகாட்டில் வேலை; பூதகணங்கள் பரிவாரம்; புலித் தோல் ஆடை உடுப்பவர்; பாம்பும், எலும்பும், பன்றிக் கொம்பும் ஆபரணமாய் அணிபவர்; உண்ணும் கலம் மண்டையோடு. உண்ணும் உணவோ ஆலகால விஷம். கிழக்காளையை வாகனமாகக் கொண்டவர்'' என்று பலபடியாக அடுக்கிக் கொண்டே போனார்.

சிவ அபசாரத்தைத் தாங்காமல் தான் தாட்சாயணி உடல் துறந்து பார்வதியாகப் பிறந்தார். இந்த மறு பிறவியிலும் சிவ நிந்தையையே கேட்க நேர்ந்த தேவி துடிதுடித்தார். ''சுவாமி, ஏதோ விபூதி பூசியிருக்கிறீர்கள், உருத்திராட்சம் அணிந்திருக்கிறீர்கள், வயதில் பெரியவராயிருக்கிறீர்கள் என மரியாதை செய்தேன். இனி உம்மிடம் பேசுவதும் பிழை. பொய் வேடம் பூண்டவரே! விரைவில் இங்கிருந்து போய் விடும்'' என்று பார்வதி ஆத்திரத்துடன் கூறினாள்.

அந்தக் கிழ அந்தணரா போவ முன்னிலும் கொடிய வார்த்தைகளை கூறினார் அவர். ''பெண் பாவாய் நான் உன் மீது மையல் கொண் மறை விதிப்படி மணக்கவே வந்தே என்னை 'இங்கிருந்து போ' என் சொல்லுவது முறையாகுமா?'' என்று.

பார்வதி இரு செவிகளையும் பொ திக் கொண்டு விம்மி விம்மி அழுதா அவரைப் போகச் செய்ய முடியா என்று கண்டபின், ''நீர் இங்கிருந் போகாவிட்டால் நான் போகிறேன் என்று சொல்லிக் கொண்டே அ விடத்தை விட்டு எழுந்தாள்.

பார்வதியை அவர் விடவில்லை எப்படி விடுவார்? விடுபவரா யிருந்தா தமது மோன நிலையை விடுத்துக் கைல யத்திலிருந்து இவ்வளவு தொலைவு வ, திருப்பாரா? ஆம், முன்னைப் பழ பொருட்கு முந்தைய சிவபெருமானே தான் அந்த முதியவர். 'வேதியா, வே கீதா' என்று போற்றப்படும் சோதியன் தான் அந்த அந்தணர். வேதிய வடிவத்தை நீக்கினார். சிவகணங்கள் சூழ்ந்து துதிக்க ரிஷப வாகனத்தில் காட்சி கொடுத்தார்.

சிவபெருமானைக் கண்ட தேவியின் ஆனந்த அநுபவத்தை நாம் எப்படி வருணிக்க இயலும்? அன்புப் புயலில் அகப்பட்ட கொடியாக அவரது திருமேனி நடுங்கியது. நாணத்துடன் பல முறை ஆண்டவனை வணங்கினார். ''எம்பெருமானே! தாங்கள் தாம் வந்து சோதித்தீர்களா? தேவரீரது மாயையை உணர முடியவில்லையே!'' என்று அதிசயித்துக் கூறினார் உலகையெல்லாம் மாயை வாய்ப்படுத்தும் மகாதேவி. ''சிவ அபவாதம் செய்யலாகாது என்று சொல்லிய நானே தங்களை நிந்தித்துப் பேசிவிட்டேனே?'' என்று உள்ளம் உருகிக் கூறினார்.

**அகிலா உணர்வால் எட்டாவரை**
**நின்மாயை தேரேன்**
**புன்னிலைச் சிந்தையேன் நின்னை விகழ்ந்தவை**
**பொறுத்தி யென்னுள்**

''பார்வதி! நீ என்னிடம் சினந்து பேசியவற்றை யெல்லாம் துதி என்றே கொண்டேன். உன்னைத் திருமணம் செய்து கொள்ள நானே வருவேன். நீ இனியும் தவம் செய்ய வேண்டாம்'' என்று கூறிச் சிவபெருமான் மறைந்து விட்டார்.

பார்வதிக்குச் சிவபெருமான் காட்சியளித்ததைத் தோழிகள் சிலர் இமவானிடம் தெரிவித்தனர். இமவான் மிக்க மகிழ்ச்சி கொண்டு தன் மனைவி மேனை

யுடன் தவமகனின் தவச்சாலைக்குச் சென்று பார்வதியை அரண்மனைக்கு அழைத்து வந்தான்.

சாமானிய மானுடர்கள் இயற்கை வேகங்களை விலங்கு போல் வெறித்துத் திரிய விடாமல் தரும சாஸ்திர வழிப்படி கட்டுப்பாட்டில் அடக்கி வாழத் திருமண வாழ்வே உபாயம். அவ்வாறு மனிதர் செம்மையான வாழ்வு வாழ வேண்டும் என்று காட்டவே எம்பெருமான் அன்னையைத் திருமணம் செய்து கொள்ளத் திருவுள்ளம் கொண்டார். மாணவனுக்குக் கற்றுத் தருவதற்காக ஆசிரியர் எழுத்துக்களைக் கூட்டிப் படிப்பதால் அவருக்கே படிக்கத் தெரியவில்லை எனலாமா? அதேபோல், நம் பொருட்டுத்தான் சிவபெருமான் பார்வதி தேவியை மணந்து காட்டினாரே யன்றி மையலும் பௌதிக உறவும் வேண்டியல்ல. தேவியார் விநாயகரையோ, ஷண்முகனையோ கருத்தரித்துப் பெற்றார் என்று இதுவரை வரலாறு இல்லை. சிவபெருமான் என்றைக்கும் பிரம்மசாரி; எம்பிராட்டி என்றைக்கும் கன்னி. ஐயன் ஞானாகரன்; தேவி ஞானாம்பாள்.

இப்படிப்பட்ட இருவரில் இன்று சிவபெருமான் மணமகன்; பார்வதி மணமகள். மணமகனின் உறவினர் போய்த் தானே பெண் பேச வேண்டும்? சிவபெருமான் சப்தரிஷிகளை அந்த ஸ்தானத்தில் எண்ணினார். இதிலிருந்து அவர்களின் பெருமை தெரிகிறது. சப்தரிஷிகள் இமயவெற்படைந்தனர்.

''அகிலாண்ட கோடியீன்றும் கன்னியென மறை பேசும் மரகதவல்லியை மூவர்க்கும் முதல்வராகிய முக்கட்பரமர்க்கு மணம் செய்து கொடுத்து என்னையும் அடிமையாகத் தருவேன்'' என்று இமவான் அவர்களிடம் கூறினான்.

ஆனால்..... அவன் அருகில் நின்ற மேனையின் தாயுள்ளம் பார்வதியைச் சிவபெருமானுக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்று கிட்டிமுட்டி வந்தபோது தயங்கியது. ''கல்யாணத்துக்குத் திடீரென்று ஒப்புக் கொள்ளக் கூடாது. அவசரமில்லாமல் நிதானமாகத்தான் இந்த விஷயத்தில் முடிவு செய்ய வேண்டும்'' என்று இமவானிடம் கூறினாள்.

இமவான் காரணம் கேட்ட பின் அவளால் கூறாது இருக்க முடியவில்லை.

''அவர் முன்பு தட்சன் மகளை மணந்த பின்பு, அவளை விட்டு மாமனார் தலையை அறுத்துவிட்டார் என்று பேசிக் கொள்கிறார்களே!'' என்று இழுத்தாள். அவளது கற்பு அப்படிப் பேசிற்று.

ஏழு முனிவர்களும் மேனையை நோக்கி, ''பரமேசன் கருணாமூர்த்தி. தட்சன் சிவநிந்தை செய்ததால் அவன் தலையை அறுத்தார். வழிபடுவோர்க்கு அறக் கருணையும் அல்லாதார்க்கு மறக் கருணையும் செய்பவர் அவர். பரமபக்தனான இமவானைப் பற்றி ஏன் கவலை?'' என்று ஆறுதல் கூறினார்கள்.

''தவசிரேஷ்டர்களே! உமாதேவியைத் திருமணம் செய்துகொள்ள விரைவில் வரும் வண்ணம் சிவமூர்த்தியிடம் தெரிவியுங்கள்'' என்று இமவான் கூறினான்.

ஏழு முனிவர்களும் திருமணத்துக்கு இமவான் இசைவு தந்ததைப் பெருமானிடம் தெரிவித்தபின் தத்தம் இருப்பிடம் சென்றனர்.

இமவான் தேவதச்சனை வரவழைத்து ''நம் ராஜகுமாரி பார்வதியின் திருமணத்துக்காக நமது தலைநகரம் ஔஷதிப்ரஸ்தத்தை இந்திரலோகம்போல் அலங்கரிப்பாயாக'' என்று கட்டளையிட்டான்.

தேவதச்சன் இமயமலையின் மேல் பல கோபுரங்களையும் மன்றங்களையும் நிலைத் தேர்களையும், வீதிகள்தோறும் பூம்பந்தர்களையும் உண்டாக்கினான். வாழைகளும் கமுகுகளும் தோரணங்களும் நாட்டினான்.

பூந்தடாகம், பொற்சிகரம் முதலியவற்றை உண்டாக்கினான். ஒருபுறத்தே பதினாயிரம் யோசனைப் பரப்பில் ஒரு புரிசையை உண்டாக்கி அதன் நான்கு வாயில்களிலும் நான்கு கோபுரங்களை அமைத்தான். மையத்தில் செம்பொன்னாலாகிய திருமண மண்டபம் அமைத்தான். பார்வதியும் பரமேசுவரனும் எழுந்தருளுவதற்காக இந்திர நீலக் கற்களினால் ஒரு சிம்மாசனமும், மற்றோர் வீற்றிருக்க ஆசனங்களும் அமைத்தான்.

நகர் முழுதும் கவினுற அலங்கரிக்கப்பட்டு நறுமணம் கமழும் மலர்கள் தூவப்பட்டன.

தேவர் கூட்டங்களும் முனிவர் கணங்களும் இமய மலையில் எள் விழ இடமின்றிக் கூடின. மேரு முதலிய மலைகளும், கடல்களும், நாகங்களும், திக்கு யானைகளும் பிறவும் வந்தன. இலக்குமி, சரஸ்வதி, இந்திராணி, முனி பத்தினிகள், துர்க்கை, காளி, சப்த நதிகள், அரம்பையர் முதலானோர் தேவிக்கு மணக் கோலம் செய்தனர்.

இமவான் தன் சுற்றத்தாருடன் திருக் கயிலாய மலை சென்று, நந்தி

தேவர் அனுமதியுடன் உள்ளே சென்றான். சிவபெருமானை வணங்கி, ''எம்பெருமானே! அகிலாண்ட நாயகியைத் திருமணங் கொள்ளத் திருவுளம் கொண்டருளினீர்கள். சோதிட வல்லுநர்கள் மங்கல தினம் எனக் கூறிய பங்குனி உத்திர நாள் இன்றேயாகும். உமையைத் திருமணம் புரிய இன்றே என் நகருக்கு எழுந்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். ''வரம்பில்லாத கணங்கள் சூழ நாம் இப்பொழுதே உன்னிடத்துக்கு எழுந்தருளுவோம். நீ முன்னே செல்வாயாக'' என்று கூறிச் சிவபெருமான் இமவானை அனுப்பினார்.

''நம்முடைய திருமணக் கோலத்தைத் தரிசிக்கும் பொருட்டு உருத்திர கணங்களையும், திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்களையும், ஏனையோரையும் இங்கே வரும்படி செய்வாய்'' என்று சிவபெருமான் நந்தி தேவரை நோக்கிப் பணித்தருளினார். நந்திதேவர் நினைத்த மாத்திரத்தில் காலாக்கினி ருத்திரர், கூச்மாண்டேசர், ஆடகேசர், வீரபத்திரக் கடவுள், மகா சாத்தனார், ஏகாதச ருத்திரர்கள், உருத்திர கணங்கள், பவர் முதலிய அஷ்ட மூர்த்திகள் ஆகியோரும், குண்டோதரன், கண்டாகன்னன், பிருங்கி, பானுகம்பன், சங்குகன்னன் முதலிய சிவபூத கணத் தலைவர்களும், அவர்களுடைய பல்கோடி பூதங்களும், திருமால், பிரமன், திக்குப்பாலகர் முதலிய தேவர்களும், சூரியன், சந்திரன் முதலிய கிரகங்களும், நட்சத்திரங்களும், சப்த மாதர்களும், அஷ்டவசுக்களும், வித்தியாதரரும், முனிவர்களும் பிறரும் ஏழு கடல் திரண்டதென வந்து நின்றனர்.

பிரம தேவர், மணக் கோலத்துக்கேற்ற மணி மகுடம் முதலிய திவ்விய ஆபரணங்களை எம்பெருமான் முன் படைத்து வணங்கி நின்று, ''எந்தையே! தங்களுக்கு விருப்பும் வெறுப்பும் இல்லை. அடியேங்கள் உய்யும் பொருட்டே திருக் கல்யாணம் செய்து கொள்ள இசைந்தீர்கள். அதே போல் அடியேங்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யவே தங்கள் திருமேனியில் உள்ள பாம்பு, பன்றிக் கொம்பு, சிரமாலை, ஆமையோடு முதலியவைகளை நீக்கி, இந்த இரத்தினாபரணங்களை அணிந்தருள வேண்டும்'' என்று விண்ணப்பித்தார். பொன்னார் மேனிப் புரிசடைக் கடவுள் புன்முறுவல் கொண்டு திருமேனியில் உள்ள பாம்பு, எலும்பு முதலியன இரத்தினாபரணங்களாகும்வண்ணம் திருவுளம் கொண்டார். இறைவன் எண்ணியவுடன் அவைகள் அவ்வாறாயின. அதுகண்ட பிரமன் முதலிய யாவரும் அற்புதமடைந்து அஞ்சலி செலுத்தினார்கள். திரிபுர தகனத்தில் தேவர்கள் சித்தம் செய்த உபகரணங்களை உதறிவிட்டுத் தமது சக்தியாலேயே வென்ற பெருமான் இப்போதும் தேவரின் காணிக்கைக்கும் மேலான அணிகளைத் தாமே படைத்துக் கொண்டார்.

சிவபெருமான் தமது இருக்கைவிட்டு எழுந்து புறப்பட்டார். நந்தித் தேவர் துதித்து முன் செல்ல, அருந்தவரும் அமரரும் புகழ, விஞ்சையர் இசைபாட, வேதாகமங்கள் வியந்து துதிக்கச் சிவபெருமான் தமது திருவடிகளைக் கும்போதரன் புயமீது வைத்து, இடபத்தின் மீது ஏறியருளினார். இக்காட்சியைக் கண்ட அனைவரும் களித்துக் கடல் போல் 'ஹர ஹர' என்று ஆர்த்து அஞ்சலி செய்தனர். ஐந்நூற்றேழு கோடி பூதங்கள் சூழ விநாயகர் வந்து வணங்கி முன்னே சென்றருளினார்.

சந்திரசூரியர் தண்ணிழற்குடையையும், வாயு சாமரத்தையும், வருணன் சாந்தாற்றியையும், அமரர்கோன் ஆலவட்டத்தையும் தாங்கி உடன் சென்றனர். பூதங்கள் பற்பல இன்னிசைக் கருவிகளைக் கடல் ஒலிபோல் முழக்கின; இறைவன் ஏவலினாலே அரி அயனாதி அனைவர்களும் தத்தம் ஊர்திகளின் மேல் புடைசூழச் சென்றனர். சிவபெருமான் திருக்கயிலாய மலையை அகன்று இமவான் நகரை அடைந்தார். (தொடரும்)

## மூட்டையும் முடிச்சும்!

இந்தியா விடுதலை பெறுமுன்பு நடந்த காங்கிரஸ் மகாநாடொன்றுக்கு மௌலானா முகம்மது அலி சென்றிருந்தார். மகாநாட்டில் பேசியவர்களெல்லாம் ஆங்கில ஆதிக்கத்தை வன்மையாகக் கண்டித்தனர். அப்போது பேசிய பிபின் சந்திரபால் ''வெள்ளையர்கள் இந்த நாட்டை விட்டு மூட்டை முடிச்சுகளுடன் வெளியேற வேண்டும்'' என்று முழங்கினார். கூட்டத்திலிருந்த மௌலானா ''என்ன, மூட்டை முடிச்சுகளுடனா அவர்களைப் போகச் சொல்கிறீர்கள்?'' என்று கத்தினார். எல்லோரும் அவரையே பார்த்தனர். அவர் உடனே, ''மூட்டை முடிச்சுக்கள் நம்முடையவையல்லவா?'' என்றாரே, பார்க்கலாம்.



# உண்மை!
# ஒரு கிராங்க்ஷாப்ட் புதுப்பித்து 1,200 ரூபாய் மிச்சம்!



பிளஸ் ஆயிரக்கணக்கான கிராங்க்ஷாப்ட்களையும் இதர விலையுயர்ந்த
ாட்டார் உறுப்புகளையும் புதுப்பிக்கின்றது. அதனால் நடைமுறைச்
லவைக் குறைக்க உதவுகிறது.

ஷம்போல ஏறிவரும் பராமரிப்புச் செலவைக் குறைத்துக் கட்டுப்படுத்த,தேய்ந்து
ான உறுப்புகளை எல்லாம் டிவிஎஸ் புதுப்பிக்கட்டும். இதனால் புதுச் சாமானின்
லையில் மூன்றில் இரண்டு பங்கு மிச்சமாகும். டிவிஎஸ் புதுப்பித்த சாமான்கள்,
துச் சாமான்களைப்போலவே நீண்ட காலம் உறுதியாக உழைக்கும்.

விஎஸ் புதுப்பிக்கும் உறுப்புகளில் சில:

யர் ஆக்ஸில் ஹவுஸிங் - கிராங்க்ஷாப்ட் - மெயின் ஆக்ஸில் - ஹப் - ஸ்டப்
ஆக்ஸில் - கிளட்ச் பிரஷர் பிளேட் - ஷாக்கிள்ஸ் - புரொபெல்லர் ஷாப்ட்,
ாக் - ஹாங்கர்ஸ் - பியூயல் இன்ஜெக்ஷன் பம்ப் ஹவுஸிங் - என்ஜின் பிளாக் -,
யர் பாக்ஸ் கவர் - சிலிண்டர் ஹெட்.

டிவிஎஸ் புதுப்பித்தால் நடைமுறைச் செலவு குறையும்; வண்டிகள் நிற்காமல் ஓடும்.





டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ்
பிரைவேட் லிமிடெட், மதுரை - திருச்சி - திருநெல்வேலி
புதுக்கோட்டை - சேலம் - கோயமுத்தூர் - திருவனந்தபுரம்

சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்
மதராஸ் - பங்களூர் - செகந்திராபாத் (டெக்கான்)

# கயல்விழி

## முப்பத்தொன்றாம் அத்தியாயம்

## அன்பெனும் பிடிக்குள் ....

**பா**மினி தன் பாடலிலேயே மெய்மறந்து நிற்பதைக் கண்ட பாணன், ''இளவரசியாரின் கட்டளையை இந்த ஏழைப் புலவன் மறந்தேனில்லை. கூத்துப் பாடலை ஆட்டமாக ஆடும் அணங்கும் என்னோடு இதோ வந்திருக்கிறாள்'' என்று அருகில் ஒருத்தி நிற்பதைப் பாமினிக்கு நினைவூட்டினான். விறலி மிகவும் பணிவோடு கரம் கூப்பினாள்.

பாமினிக்கு அப்போதுதான் தன்னுடைய தவறு தெரிந்தது போலும். அதை மறைக்க விரும்பும் திறமையோடு ஓடோடியும் வந்து விறலியைத் தழுவிக் கொண்டாள். இருவரையும் உள்ளே அழைத்துச் சென்றாள்.

''பாணராக வந்திருக்கும் இவரை முதலில் இனம் கண்டுகொள்ள முடியவில்லை. அதனால்தான் சிறிது 'வியப்படைந்தேன்'' என்று விறலியிடம் கூறினாள் இளவரசி.

''இளவரசி! இன்னும் என்னைச் சிறை செய்ய வேண்டும் என்ற ஆணை அப்படியேதான் இருக்கிறது. சோழ நாட்டுக் காவலர்கள் என்னை எந்தக் கணத்திலும் கைப்பற்ற முயல்வார்கள்'' என்று மெல்ல அவளிடம் கூறினான்.

சுற்றுமுற்றும் பார்த்தாள் பாமினி. அருகில் விறலியைத் தவிர வேறு யாருமில்லை. காவலர்கள் தொலைவில் நின்றனர்.

''புலவர் தாமாக வந்து சிறைக்குள் அகப்பட்டுக் கொண்டிருக்கிறார். சிறையிலிருந்து இப்போதைக்கு அவரை விடுவிப்பதாக உத்தேசமில்லை. விடுதலை பெற விரும்பினால் அவரை நேரே சோழ நாட்டுக் காவலர்களிடம் சேர்ப்பித்து விடுவேன். கங்காபுரியில் செய்ததுபோல் இங்கு எளிதாகத் தப்ப முடியாது.''

இப்படிக் கூறி விட்டுப் பாமினி புன்னகை பூத்தாள். பாணனுடன் வந்த விறலிக்கோ இருதயம் நடுங்கியது. அங்கே அந்த மாளிகையில் மூலைக்கு மூலை காவலர்கள் நின்றார்கள். கண்ணனூரில் அவன் கண்டு அஞ்சி நடுங்கினானே, அத்தகைய பயங்கரமான தோற்றங் கொண்ட காவலர்கள் அவர்கள்.

இளவரசி ஒரு கூடத்தின் கதவை மெல்லத் திறந்தாள். அவர்களுக்கு அமர்ந்து கொள்வதற்கு இருக்கைகளைச் சுட்டிக் காட்டினாள். பிறகு கதவைத் தாழிட்டுக் கொண்டு எங்கோ சென்று விட்டாள்.

காஞ்சிமா நகரத்தின் கோசல நாட்டு மாளிகைக்குள் பைந்தமிழ்க் குமரனையும் கயல்விழியையும் அழைத்துச் சென்ற பாமினி, அவர்களைத் தனித்திருக்க விட்டு, உள்ளே சென்றாள். சென்றவள் இன்னும் திரும்பவில்லை.

கயல்விழிக்குப் பைந்தமிழ்க் குமரனிடம் எல்லையற்ற கோபம். விழிகளால் அவனைச் சுட்டெரித்து விடுவதுபோல் பார்த்தாள். அவளுக்கு அந்த மாளிகையைப் பிடிக்கவில்லை. அவன் அவளை அங்கு அழைத்துக் கொண்டு வந்தது பிடிக்கவில்லை.- இவ்வளவும் அவள் முகத்தில் ஒளிவு மறைவின்றித் தெரிந்தது.

பைந்தமிழ்க் குமரன் நகைத்துக் கொண்டே அவளிடம் கேட்டான்: ''கயல்விழி! உனக்கு இந்த இளவரசி பாமினியைச் சிறிதும் பிடிக்கவில்லையல்லவா?''

திடுக்கிட்டாள் கயல்விழி. அவளுடைய நினைவை அவன் கண்டு கொண்டதால் ஏற்பட்ட அதிர்ச்சி அது.

''எனக்குத்தான் அவள் இவ்வளவு பரிவு காட்டுவது பிடிக்கவில்லை.''

''பொய்! என்னிடமே எதற்காக இப்படிப் பேசுகிறீர்கள்?'' என்று கண் கலங்கக் கேட்டாள் அவள். ''உங்களுக்குப் பிடிக்கவில்லை என்பதுதான் உங்கள் முக மலர்ச்சியால் தெரிகிறதே! அடடா, எவ்வளவு அன்பு, எவ்வளவு பணிவு, எவ்வளவு ஆனந்தம் உங்களுக்கு! இப்படி ஓர் இளவரசியிடம் பழக்கம் உண்டு என்பதை எதற்காக என்னிடம் நீங்கள் மறைத்து வைத்தீர்களோ?''

# அகிலன்

''மறைக்க விரும்பினால் உன்னை உடன் அழைத்து வந்திருப்பேனா? நீ சற்றுப் பொறுமையாக இருக்க வேண்டிய சமயம் இது. உன்னிடம் பிறகு நான் விவரமாகச் சொல்கிறேன். இப்போது நீ எனக்கு ஒரே ஒரு உதவியைச் செய்யவேண்டும்.''

அவள் பதிலளிக்கவில்லை. பாமினி அவனிடம் காண்பித்த பரிவு அவளுடைய உள்ளத்துக்கு வேதனையைத் தந்து விட்டது. இதை அறிந்த பைந்தமிழ்க் குமரன் அவள் அருகில் நெருங்கி வந்தான்.

''கயல்விழி!'' என்று இரகசியக் குரலில் அழைத்தான். ''உன்னிடமில்லாத அன்பையோ, அழகையோ, பண்பையோ நான் இந்த இளவரசியிடம் கண்டுவிட மாட்டேன். அப்படி நான் தவறு செய்தாலும் என் தலைக்கே ஆபத்து வந்துவிடும். என் எல்லையை அறிந்து எனக்கு யாரிடமும் பழகத் தெரியும்.''



கயல்விழிக்கு நம்பிக்கை ஏற்பட்டது. ''பிறகு எதற்காக இங்கு வந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

''அதுவா?'' புலவன் சுற்று முற்றும் பார்த்தான். பிறகு அவளுடைய செவிகளுக்கு மட்டிலும் கேட்கும்படியாக எதையோ கூறினன். அவளுடைய விழிகள் மகிழ்ச்சியுற்றன. தன் மிக முக்கியமான ரகசியத்தை அவன் அவளிடம் பகிர்ந்து கொண்டதில் ஒரே ஆனந்தம் அவளுக்கு.

''நான் உன்னிடம் கேட்கும் உதவி இதுதான்'' என்ருன் புலவன்; ''இளவரசியிடம் நீ அன்போடு பழக வேண்டும்; கலகலப்போடு பேச வேண்டும்; எப்படியாவது அவளை உன் தோழியாக்கிக் கொள்ள வேண்டும்.''

கயல்விழிக்கு அவனுடைய யோசனை இப்போது நியாயமென்றே தோன்றியது. கூத்துக்களில் நடித்துப் பண்பட்ட அவளுக்கு இந்த இளவரசியிடம் தாளு நடிக்கத் தெரியாது? அவள் நடிக்கத் துணிந்து விட்டாள்.

கூடத்துக்கு வெளியே காலடி ஓசை கேட்டது. கதவைத் திறந்து கொண்டு முதலில் உள்ளே நுழைந்தாள் பாமினி. அடுத்தாற் போல் வந்தது யார்? பாமினியின் முகச்சாயல் அப்படியே அந்தப் பெண்மணியிடமும் இருந்தது. பாமினியின் தமக்கையாக இருக்க வேண்டுமென்று நினைத்தான் பைந்தமிழ்க் குமரன்.

''எனது அன்னையார் இவர்கள்'' என்று அறிமுகம் செய்து வைத்தாள் பாமினி. ''இவர்களிடம் முன்பே உங்களைப் பற்றிக் கூறியிருக்கிறேன்.''

''வணக்கம் தாயே!'' என்று முகமும் அகமும் குளிரக் கைகூப்பினுன் பைந்தமிழ்க் குமரன். ''ஆடல் பாடல்களில் வல்லவர்கள் என்று குலோத்துங்கச் சக்கரவர்த்திகளே தங்கள் பெருமையைப் பற்றிக் கூறியிருக்கிருர்கள். தங்களைக் காணும் வாய்ப்பும் கிடைத்திருக்கிறது.''

கயல்விழியும் தன் வணக்கத்தைத் தெரிவித்தாள். தாயும் பெண்ணுமாக இருந்தவர்கள் தமக்கையும் தங்கையும் போன்ற தோற்றத்தில் இளமை குலுங்கக் காட்சியளித்தார்கள். கயல்விழி பாமினியின் அருகில் சென்று, ''தங்கள் அன்னையாருக்குத் தமிழ் தெரியுமா?'' என்று மிகுந்த ஆர்வத்துடன் கேட்டாள்.

கயல்விழியின் குதூகலமும் கலகலப்பும் இப்போது பாமினியைப் பற்றிக் கொண்டன. ''தாம் பேசுவதைக் கூடியவரையில் புரிந்து கொள்வார்கள். அவர்களுக்கு நம்மிடம் பேசுவதற் சரளமாகத் தமிழ் வராது.''

கயல்விழி அவர்களுடைய நாட்டி நடனக் கலைகளைப் பற்றி விசா தாள். தமிழ் நாட்டின் கூத்து வ களைப் பற்றியும் கூறினள்.

''ஆமாம், தங்கள் தந்தைய இங்கு வந்திருப்பதாகக் கேள்வி றேன். அவர்களை எப்போது கா முடியும்?'' என்று எதுமறியாதவ போல் கேட்டான் புலவன்.

''அவர்கள் இங்கு வந்தவுடன் திரும் விட்டார்கள்'' என்று கவலையோ கூறினள் பாமினி. ''துவார சமுத்திர தில் நாங்கள் இருப்பதை விட இ போதைக்குப் போர் முடியும் வரையி காஞ்சியில் இருப்பதே நலம் என் முடிவு செய்தார்கள். போர் என் வந்துவிட்டால் ஆண்களுக்குக் குடும்ப கவலை ஏது? நீங்கள் உங்கள் பாடலி தான் கூறியிருக்கிறீர்களே!''

''போர் வந்து விட்டதா?''

''தெலுங்கச் சோழர்களும் கா தியர்களும் ரகசியமாக ஒப்பந்த செய்து கொண்டு விட்டார்களாம். கோசல சாம்ராஜ்யத்தின் வளர்ச்சி அவர்கள் கண்களை உறுத்துகிறது. எந்த வேளையிலும் போர் நடக்கக் கூடும். இப்போது காஞ்சியிலிருந்த எங்கள் படைகளும் சோழப் படைகளும் அங்கேதான் போயிருக்கின்றன.''

''போர் வெறி என்றைக்குத்தான் நம்மை விட்டு ஒழியுமோ?'' என்று அநுதாபப்பட்டுக் கொண்டான் புலவன். கயல்விழிக்குச் சிரிப்பு வரும் போலிருந்தது. அடக்கிக் கொண்டாள்.

''போரில்லாமலே அரசர்கள் வாழ முடியாதா?'' என்று கேட்டாள் பாமினி.

''வாழ முடியுமென்றுதான் நானும் நினைக்கிறேன். அரசர்கள் அரசர்களாக மட்டும் வாழ நினைத்தால் போரில்லாமல் வாழ முடியும். அடுத்த அரசர்களை வென்று அடக்கிச் சக்கரவர்த்திகளாகச் சாம்ராஜ்யத்தைக் கட்டி ஆள வேண்டும் என்ருல் போர் செய்து தான் தீர வேண்டும். முதலில் மற்றவர்களை வென்று அடக்குவார்கள். பிறகு வென்று அடக்கப்பட்டவர்கள் தங்களை வென்றவர்களை வெல்லத் துடிப்பார்கள். இப்படியே முடிவில்லாமல் போர்கள் தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கும்.''

''எனக்கு இந்தப் போர் வெறி பிடிக்கவேயில்லை'' என்ருள் பாமினி.

''பெரிய சாம்ராஜ்யத்து இளவரசி தாங்கள். வலிமை கொண்ட லட்சோப லட்சம் போர்வீரர்களை ஆட்டி

# கலாக்ஷேத்ரா

## கலை விழா

**25-12-64 முதல் 30-12-1964 வரையில்**

## எஸ். ஐ. ஈ. டி. தியேட்டர்

**தேனாம்பேட்டை : சென்னை-18**

போன் : 71844

(காலை 8 மணி முதல் மாலை 5 மணி வரை)



25-12-64 வெள்ளி மாலை 6-30 மணிக்கு

**ருக்மிணி கல்யாணம்**

(ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் புதுத் தயாரிப்பு தெலுங்கில்)

26-12-64 சனி மாலை 6-30 மணிக்கு

**ருக்மிணி கல்யாணம்**

27-12-64 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு

**கதம்ப நிகழ்ச்சிகள்**

கிராமிய மற்றும் இதர நடனங்கள்

28-12-64 திங்கள் மாலை 6-30 மணிக்கு

**கதகளி : பிரகலாத சரிதம்**

29-12-64 செவ்வாய் மாலை 6-30 மணிக்கு

**கீத கோவிந்தம் - சம்ஸ்கிருதம்**

30-12-64 புதன் மாலை 6-30 மணிக்கு

**கண்ணப்பர் குறவஞ்சி - தமிழ்**



டிக்கட்டுகள் :

ஆதரவாளர்கள் (சீசன்) ரூ. 100/-

| சீசன் | | தினசரி | |
|---|---|---|---|
| டோனர்கள் | ரூ. 40/- | டோனர்கள் | ரூ. 10/- |
| ரிசர்வ்டு | ரூ. 20/- | ரிசர்வ்டு | ரூ. 5/- |
| | | முதல் வகுப்பு | ரூ. 3/- |
| | | இரண்டாம் வகுப்பு | ரூ. 2/- |

முதல் இரண்டு வகுப்புகளைத் தவிர மற்ற எல்லா வகுப்பு டிக்கட்டுகளும் ரிசர்வ் செய்யப்படும்

## நாளொரு மேனியாக...

# எழிலோங்கச் செய்வது

# ரெக்ஸோனா








கொஞ்சி உறவாடி நாளொரு மேனியாக உமது
எழிலுக்குப் பொலிவை ஊட்டி வளர்ப்பது ரெக்ஸோனா.
இதில் வியப்பென்ன? சரும எழிலுக்கான தைலங்களின்
கலவையான 'கேடில்' இருக்கிறது ரெக்ஸோனாவிலே.
தவிரவும், கமகமவென்று மணம் கமழ்வதால்,
மனமோங்கி மலரும் உங்கள் பொலிவு.

**கேடில் அடங்கிய ரெக்ஸோனா உங்கள் சருமத்திற்கு உகந்தது.**

RX. 24-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

வக்கும் மாவீரரின் குமாரத்தி ாங்கள். தங்களுக்கே போர் பிடிக்க இல்லையென்றால், கவி பாடும் புலவ நடிய எனக்குப் பிடிக்குமா? சக்கர வர்த்திகள் தங்கள் சாம்ராஜ்யத்து ஆசைகளை விட்டு விட்டு, எல்லா அரசர் களிடமும் அன்போடு பழகலாமே!''

புலவனும் தமது குமாரத்தியும் அர சியல் பேச்சுக்களில் முனைந்ததை அர சியார் அவ்வளவாக விரும்பவில்லை. பெண்களைப் போலவே புலவர்களுக் கும் கவிஞர்களுக்கும் அவ்வளவாக அரசியல் அறிவு கிடையாது என்பது அவர்களுடைய எண்ணம்.

ஆகவே, அரசியார் பாமினியை அரு கில் அழைத்துக் கன்னடத்தில் அவ ளிடம் ஏதோ விசாரித்தார். கயல் விழியைப் பற்றி அவளிடம் கேட்பது போல் தோன்றியது. பாமினியின் முகம் அதைக் கேட்டவுடன் சிவந்தது.

''என்ன கேட்கிறார்கள்?'' என்றாள் கயல்விழி.

''நான் எதைக் கேட்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேனோ, அதைத்தான் அன்னையாரும் அறிந்து கொள்ள ஆவலாயிருக்கிறார்கள். வந்து வந்து ... வந்து ... புலவருக்கு நீங்கள் மனைவிதானே?'' என்று தயக்கத்தோடு கேட்டுவிட்டுத் தன் ஓரக் கண்களால் கயல்விழியின் கழுத்தை நோக்கினாள்.

அங்கே மங்கலநாண் தென்படவில்லை.

''இல்லை'' என்று சிரித்துக்கொண்டே பதிலளித்தாள் கயல்விழி. ''அவர் புனைந்த கூத்துப் பாடலை நான் அரங் கேறி நடிக்கிறேன்; என் ஆசிரியர் இவர். என்னோடு துணைக்கு என் தந்தையாரும் வந்திருக்கிறார். நான் அவரிடம் திரும்பிச் செல்ல வேண்டும்.''

''கயல்விழி இப்போதைக்கு அவ ளுடைய கலையைத்தான் மணந்து கொண்டிருக்கிறாள்'' என்றான் புலவன்.

''நீங்கள்?''

''நான்?... நான் என்னுடைய கல் விப் புலமையை மணந்து கொண் டிருக்கிறேன். அறிவுப் பசியைப் போக் கிக்கொள்ளும் பிரமசரிய ஆசிரமம் இன்னும் தீரவில்லை.''

பாமினிக்கு இதைக் கேட்டதும் தன் மனத்துயரம் நீங்கியதுபோல் இருந்தது. இனம்புரியாத எல்லையற்ற பேரானந்தம் அவளுக்கு. அதைக் கயல்விழியின் கூர் விழிகளும் கண்டுகொண்டன.

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்

# ....அகப்பட்ட இருவர்

**பா**மினியும் அவள் அன்னையும் அவர் களைத் தங்களுடைய மாளிகையிலேயே தங்கும்படி வற்புறுத்தினார்கள். ஆகவே ஆதிச்ச தேவரையும் அங்கு அழைத்து வரும்படியான அவசியம் ஏற்பட்டது. அவரை அழைத்துக் கொண்டு திரும்பு வதாகக் கூறிவிட்டு அவர்கள் திரு முனைப்பாடி மாளிகைக்குச் சென் றார்கள். தன்னுடைய ரதத்தில் அவர் களை அனுப்பி வைத்தாள் பாமினி.

ரதம் வெளியே காத்துக் கொண்டு நின்றது. ஆதிச்ச தேவருக்கு ஆனந் தம் தாங்கவில்லை. கொண்டு வந்த பொருள்களைச் சேகரித்துக் கொண்டு புறப்படுவதில் முனைந்திருந்தார். அப் போது உட்புறம் கயல்விழியிடம் தாங்கள் அங்கு வந்த நோக்கம்பற்றி விரி வாகக் கூறினான் பைந்தமிழ்க்குமரன்.

''கயல்விழி! சோழராஜ்யம் என்பது இப்போது வீரநரசிம்மனின் துணை வலிமையால் நின்று கொண்டிருக் கிறது. பாண்டிய நாட்டு விடுதலைக்கு இப்போது முதல் தடையாக இருப் பது இந்தக் கோசல சாம்ராஜ்யம் தான். பாமினியின் தந்தைக்குக் குலோத்துங்கர் அளித்திருக்கும் விரு துப் பெயர் என்ன தெரியுமா? 'பாண் டிய யானைக்குச் சிங்கம்!' அதாவது, பாண்டிய நாட்டு யானை விடுதலை வேட்கை கொண்டு விட்டால், அதை அறைந்து அதன் மத்தகத்தைப் பிளந்து இரத்தம் குடிக்கக் கூடியது சிங்கம். மெய்யாகவே அத்தனை வீரமும் ஆண் மையும் கொண்ட சிங்கம்தான் இந்த வீர நாசிங்கம்!''

உச்சி முதல் உள்ளங்கால் வரையில் நடுக்கமெடுத்தது கயல்விழிக்கு. ''அந் தச் சிங்கத்தின் குகைக்குள்ளே நாம் போக வேண்டுமென்கிறீர்களா? அதன் குட்டியோடு விளையாடினால் நமக்கு என்ன கதி நேரும் தெரியுமா?''

''போய்த்தான் ஆக வேண்டும்!'' என்றான் தலைவன். ''வேங்கைப் புலி யின் குகைக்குள்ளே போய் அதி லிருந்து மீண்டு வந்தவன்தானே? அப் போது நான் மனிதன். இப்போது நீயும் துணைக்கு இருக்கிறாய். பத்திர மாகத் திரும்பி விடலாம்.''

கயல்விழிக்கு இப்போது புது வலிமை பிறந்து விட்டது. ஆயிரம் யானைகளை



மண்ணெண்ணெய் விற்பவர்: பால்காரய்யா! கண் தெரிய வில்லையா? உன் மாடு அதோ இருக்கு. என் இருஞுனுயிலேக் கறக்க உட்கார்ந்து விட்டாயே!

அடக்கி ஒடுக்கும் அந்த ஆண் மகன் தன்னை ஒரு பெருந் துணை என்று நம்புகிறான். 'அவ்வளவு ஆற்றலா என்னிடம் இருக்கிறது?' என்று வியப்படைந்தாள் கயல்விழி.

''உன் ஆற்றல் உனக்குத் தெரியாது: எனக்குத் தெரியும்'' என்று கூறி நகைத்தான் பைந்தமிழ்க் குமரன். ''ஒரு கதை சொல்கிறேன் கேட்கிறாயா?'' என்றான்.

கயல்விழி புறப்படுவதற்காகத் தன்னை இன்னும் நன்றாக அலங்கரித்துக்கொண்டிருந்தாள். ''சொல்லுங்கள், கேட்கிறேன்'' என்றாள்.

''இந்தப் பாமினியின் தந்தைக்குத் தந்தை இருக்கிறாரே. அந்த வல்லாள தேவர் இளைஞராக இருந்தபோது சோழ சக்கரவர்த்தி குலோத்துங்கரும் இளைஞராக இருந்தார். இருவரும் அப்போது பகைவர்கள்: இரண்டு சாம்ராஜ்யங்களும் ஒன்றை யொன்று விழுங்குவதற்குத் தருணம் பார்த்துக் கொண்டிருந்தன. அப்படிப் போர் நடந்திருந்தால் சோழ சாம்ராஜ்யமே இருந்திருக்காது. பாண்டிய நாடு பாமினியின் தந்தைக்குச் சிற்றரசாகி யிருக்கும். அப்படி யெல்லாம் நடக்க முடியாதபடி செய்தவள் யார் தெரியுமா? ஒரு பெண்! ஏதுமறியாப் பேதைப் பெண்! குலோத்துங்கருக்குத் தங்கை முறையுள்ள ஒரு சோழ நாட்டு இளவரசியாக்கும்!''

''என்ன!'' என்று ஆர்வத்தோடு அவன் முகத்தை நோக்கினாள் கயல்விழி. தாமரையைப் போன்று விரிந்த அவள் விழி அழகைப் பருகிக் கொண்டே மேலே கூறினான் பைந்தமிழ்க் குமரன்.

''ஆமாம், அந்தச் சோழமாதேவியை வல்லாள தேவருக்குத் திருமணம் செய்து விட்டார் குலோத்துங்கர். இதன் மூலம் ஒரு பயங்கரமான பகைவரை வென்று, அவரை நன்றியுள்ள மைத்துனராக்கிக் கொண்டார். அதோடு அந்த உறவை விட்டாரா? தன் தங்கையென்கிற மலர் மாலையை அவர் கழுத்தில் போட்டுச் சுற்றிவிட்டு. அதன் நறுமணத்தில் அவரை மயங்கச் செய்து விட்டு, அவர் தலையில் அவருடைய சோழ சாம்ராஜ்யத்தின் பாதிப் பளுவைச் சுமத்தி வைத்து விட்டார். கண்ணனூரிலும் காஞ்சியிலும் அவருடைய படைகளைக் கொண்டு வந்து நிறுத்தி, சோழ சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றும் நன்றியுள்ள நாய்க்குட்டிகளாக அந்தப் படை வீரர்களை மாற்றி விட்டார். இவ்வளவுக்கும் ஒரே ஒரு பேரழகி தான் மூல காரணம்! பெண்ணின் வலிமை பெண்ணுக்குத் தெரியாது. தெரிந்து கொள்ளக் கூடிய ஆண் மகன் அதைத் தெரிந்துகொள்வான்.''

கயல் விழியின் பரவசத்துக்கோர் எல்லை யில்லை. அந்த விநாடியிலேயே ஒரு மலர் மாலையாக மாறித் தன் தலைவனின் கழுத்தைச் சுற்றி வளைத்துக்கொள்ள வேண்டுமென்ற துடிப்பு அவளுக்கு. தன்னுடைய அன்பு மணத்தை அவனுக்கு வாரி வழங்கினால், அவனும் எண்ணுதற்கரிதான வீர தீரச் செயல்கள் செய்து பெருமை பெறுவானல்லவா? இந்தப் பெண் பிறவி எடுத்ததற்கு அதை விடப் பெரும் பேறு என்ன இருக்கிறது?

நாழிகை ஆயிற்று. அவர்கள் ரதத்தை நோக்கி வந்தார்கள்.

''கயல்விழி! நான் சொல்லிய செய்திகள் நினைவிலிருக்கட்டும். நாம் சிங்கத்தின் குகைக்குப் போகிறோம். விழிப்போடு இருந்து கொள்.''

''விழிப்போடு இருக்க வேண்டியது தாங்கள்தான்!'' என்று கூறி நகைத்தாள் அவள். ''சிங்கம் யானையை வெற்றி கொள்வது ஒருபுறமிருக்கட்டும். சிங்கக் குட்டியான பாமினிப் பெண்ணிடம் இந்த யானை ஏமாற்றமடைந்து விடப் போகிறது!''

''ஏமாறுவதற்கு வழி ஏது? கண்கள் இரண்டு எப்போதுமே என்னைக் காவல் புரிந்து வரும்போது எப்படி என்னால் ஏமாற முடியும்?''

கயல்விழியின் விழிகள் செருக்குடன் அவனை நோக்கிச் சிரித்தன.

**பா**மினி அவர்களுடைய வரவை எதிர் நோக்கிக் காத்துக் கொண்டிருந்தாள். அவர்களுக்கென்றே விருந்

னர் விடுதியில் இரண்டு கூடங்கள் சித்தமாகி விட்டன. கயல்விழிக்கும் அவள் தந்தைக்கும் ஒரு கூடம்; பைந்தமிழ்க் குமரனுக்கு மற்றொரு கூடம்.

மறுநாள் முதல் அங்கே ஆடலும் பாடலுமாக இருந்தது. கயல்விழி ஆடினாள்; பைந்தமிழ்க் குமரன் பாடினான்; ஆதிச்ச தேவர் முழவிசைத்தார். யாவுமே உள் மண்டபத்தின் அரங்கத்துக்குள் நடந்தன. பாமினியின் அன்னையும் கலை நாட்டம் கொண்டவராக இருந்ததால், தமிழகத்தின் கொற்றவைக் கூத்துக்கள் அவருக்குப் புதுமையாக இருந்தன.

பாமினியின் எழில் மிக்க நளினமான நடனங்களைக் காணும் வாய்ப்பு பைந்தமிழ்க் குமரனுக்கு ஏற்பட்டது. கம்பனின் கவிதைகளைப் பாடச் சொல்லிப் பெண்கள் அவனிடம் இராமனின் கதையைக் கேட்டார்கள். பைந்தமிழ்க் குமரனுக்கும் அது ஒரு வேடிக்கை நிறைந்த பொழுது போக்காகவே இருந்தது. ஒய்வு கிடைக்கும்போது மெல்ல மற்ற காவலர்களிடம் பழகினான். அவர்களுடைய சொந்தக் கதைகளையும் கேட்டான். தனக்கு வேண்டிய கதைகளையும் அவர்களுக்குத் தெரியாமல் அறிந்து கொண்டான்.

ஒரு வாரம் சென்றது. பாமினியிடம் விடை கொடுக்கும்படி கேட்டான் அவன். அவள் மறுத்துவிட்டாள். "உங்களுக்கு இங்கே என்ன குறை இருக்கிறது?" என்றாள் அவள்.

பைந்தமிழ்க் குமரனின் பிடிவாதம் அதிகமாகியது. 'திடீரென்று கங்காபுரியில் செய்தது போல் செய்து விட்டால் என்ன செய்வது?' என்று நினைத்தாள் பாமினி.

அவனுடைய கூடத்துக்குள் அவன் ஏதோ சிந்தனை செய்தவாறு அமர்ந்திருந்தான். சந்தடி செய்யாமல் அவன் அருகில் சென்று நின்றாள் பாமினி.

"ஆழ்ந்த யோசனை எதற்காகவோ! எப்படி இங்கிருந்து தப்புவது என்று பார்க்கிறீர்களா?"

அவன் சிரித்தான்.

"ஆமாம், கங்காபுரி மாளிகையிலிருந்து நீங்கள் எப்படித் தப்பினீர்கள்? சாளரத்தின் இரும்புக் கம்பிகளை வளைப்பதற்கென்றே ஏதும் ஆயுதங்களை மறைத்து வைத்திருந்தீர்களா?"

"இதோ இந்த ஆயுதங்கள்தான் அவை!" என்று தன் கரங்கள் இரண்டையும் நீட்டினான் அவன். பாமினி அவற்றைக் கூர்ந்து நோக்கினாள். எவ்வளவு அழகான, வலிமை நிறைந்த முறுக்கேறிய கரங்கள்!

அவள் பெருமூச்சு விட்டாள்.



"இது அல்வாவா? இதை இந்த ஸ்பூனால் வெட்டுவதற்குள் இரண்டு ஸ்பூன்கள் உடைந்து போச்சு! நான் இந்த அல்வாவுக்குப் பணம் கொடுக்க மாட்டேன்!"

"வேண்டாம். நீங்கள் உடைச்ச ஸ்பூன்களுக்குப் பணம் கொடுத்தால் போதும்!"

"தந்தையார் திரும்பி வரும்வரை நீங்கள் இங்கே தங்கியிருக்கலாமே?"

"இளவரசியின் அன்பை என்னால் உணர முடிகிறது. ஆனால் இப்போதே நான் குற்றம் புரிந்துவிட்டேனோ என்று நினைக்கிறேன். அரசர் இல்லாதபோது இங்கு வந்தது தவறில்லை; ஆனால் தங்கியது தவறு. மீண்டும் ஒருமுறை இங்கு வருகிறேன்!"

"நாங்கள் துவாரசமுத்திரத்துக்குச் சென்றுவிட்டால்?"

"அங்கு வருகிறேன்!"

"இன்னும் சில நாட்களாவது..."— கெஞ்சும் குரலில் கேட்டாள் அவள்.

"இளவரசி! நான் மறைந்து வாழ்பவன். இனியும் நான் இங்கிருப்பதால் தங்கள் பேருக்கு ஏதும் இழுக்கு நேரக்கூடும். மேலும் சோழ சாம்ராஜ்யத்துக்கும் தங்களுக்கும் உள்ள உறவு என்னால் பாதிக்கப்பட வேண்டாம். சோழ நாட்டுக் காவலர்களுக்கு எப்படியோ நான் இங்கு இருப்பது தெரிந்து விட்டதென்றே நினைக்கிறேன்."

அவன் கூறிய கடைசிச் சொல் அவளையுமே கலங்க வைத்தது. தந்தை இல்லாதபோது ஏதும் தவறு நடந்தால்...?

"அவர் வந்தவுடன் நானே அவரிடம் பேசி, குலோத்துங்கரின் கட்டளையை நீக்கி விடும்படி செய்கிறேன்."

"நன்றி கூறுவதற்கு அப்போது நான் மீண்டும் வருகிறேன்."

பைந்தமிழ்க் குமரனும் மற்ற இருவரும் அங்கிருந்து கிளம்பினார்கள். கயல்விழியை அணைத்தவாறு கண்ணீர் வடித்து விடை கொடுத்தாள் பாமினி. அவளுடைய மனத் துயர் கயல்விழியையே உருக்கிவிட்டது. **(தொடரும்)**




"திரைக் கதை ஒன்று வேண்டுமா?... ஓடுங்கள், வங்காளத்துக்கு....'' என்று ஓடிய கதாசிரியர்களின் காலை வாரிவிட்ட படங்களுள் 'முரடன் முத்து'வும் ஒன்று. பொம்மைத் தொழில், பிரம்மச்சரிய விரதம், முரட்டுக் குணம் என்று ஏதேதோ புதுமையைப் புகுத்துவதாக எண்ணி, பார்த்துப் பார்த்துப் புளித்துப் போன சம்பவங்களையெல்லாம் கொண்டு இந்தக் கதை ஒட்டப்பட்டிருக்கிறது.

அழகான காங்கிரீட் சாலையில் கதையைக் கிளப்பி, பிறகு தார் ரோடு, கப்பி ரோடு, மண் சாலை என்று கடந்து கடைசியில் திக்குத் தெரியாத காட்டின் நடுவில் உள்ள குட்டையிலே நன்றாகக் குழப்பியுள்ளார்கள்.

மருதமுத்து பொம்மை செய்யும் கலைஞன். அவன் தம்பி காளிமுத்து முரடன்; அனுமார் பக்தன்; அண்ணியின் வார்த்தைகளுக்குக் கட்டுப்பட்டவன். இவர்கள் குடும்பத்தைக் கலைக்கவென்றே அம்பாத்துரையிலிருந்து ஒரு குடும்பம் வந்து சேருகிறது. அதன் பிறகு ஒன்றாக வாழ்ந்து வந்த குடும்பம், ஒரு கள்ளப் புருஷன் நுழைவால் பிரிந்து, வருந்தி, அல்லல்பட்டுக் கடைசியில் ஒன்று சேருகிறது. இதற்கு மத்தியில் தமிழ்ப் படங்களுக்கே உரித்தான காதல், அந்தஸ்து, கண்ணீர், வில்லன் என்று எல்லாம் உண்டு.

நடிப்பைப் பொறுத்தவரை சிவாஜிக்குச் சற்றுப் புதுமையான பாத்திரம்தான். அவரை முரடனாகவும், ஆஞ்சநேய பக்தனாகவும் காண்கிறோம். பாத்திரத்தை உணர்ந்து, கஷ்டப்பட்டு நடித்திருக்கிறார் என்றாலும் இவ்வளவு ஆர்ப்பாட்டம் தேவைதானா? ஒருசில காட்சிகளில் நமக்கு நிகர் தாமே என்று வெளுத்து வாங்குகிறார். சிவாஜி கணேசனுக்கு அடுத்தபடியாக நம்முடைய நினைவில் எம். வி. ராஜம்மா வருகிறார். வழக்கமான பாத்திரமானதால் புதுமையுமில்லாமல், குறையுமில்லாமல் தரமாக நடித்திருக்கிறார். பந்துலுவின் தாடி மீசையே அவரைவிட நன்றாக நடித்திருக்கின்றன. குழந்தை ஷீலாவின் நடிப்பு நமக்குப் பரவசமூட்டுகிறது என்றாலும் அதை ஆரம்பத்திலேயே கொன்றுதீர்த்து விட்டாரே கதாசிரியர்? சந்திரகாந்தா ஏதோ கண்ணீர் விட்டுப் பாஸ் மார்க் வாங்கி விடுகிறார். இந்தப் படத்தின் கதாநாயகி தேவிகாவைப் பற்றிக் கேட்கிறீர்களா? இப்போது வரும் எந்தத் தமிழ்ப் படங்களில்தான் (கைகொடுத்த தெய்வம், பூம்புகார், நவராத்திரி ஆகிய படங்களைத் தவிர) கதாநாயகியை நடிக்க விடுகிறார்கள்?

நாகேஷுக்குக் கொடுத்திருக்கும் பாகமோ குறைவு. அதிலும் 'பட பட'வென்று பொரிந்து தள்ளிவிட்டுப் போய் விடுகிறார். என்ன பேசுகிறார் என்றே நமக்குப் புரியவில்லை. இப்படியே போனால் நாகேஷின் நிலை பரிதாபமாகத்தான் முடியும்.

பிரேம்நசிரை இனிமேல் தமிழ்ப் படங்களில் காண முடியுமா என்ற வினாதான் அவரைப் பார்க்கும் போது எழுகிறது! அசோகன், வி. கே. ராமசாமி, கருணாநிதி, ஓ. ஏ. கே. தேவர், சி. கே. சரஸ்வதி ஆகியோரும் படத்தில் வந்து செல்கிறார்கள்.

பாடல்களில் சூலமங்கலம் ராஜேசுவரி பாடும் 'செவ்வந்திப் பூச்செண்டு' என்ற பாடல் இனிமையாக உள்ளது. மற்றும் சீர்காழி பாடும் 'கோட்டையிலே ஒரு ஆலமரம்' என்ற பாடலும், டி. எம். எஸ். பாடும் 'பொன்னாசை கொண்டோர்க்கு' என்ற பாடலும் பரவாயில்லை. மற்றவையெல்லாம் 'போர்'.

வசனங்கள் சில இடங்களில் ஆழமாக உள்ளன. ஒளிப்பதிவு, ஒலிப்பதிவு ஆகியவற்றில் புதுமையில்லை. படத்தில் குறிப்பிடும் காட்சிகள் அதிகம் இல்லை என்றாலும், குறைகள் இல்லாமலாவது இருந்திருக்கக் கூடாதா?

ஒரு சின்னப் பொய்யை மெய்யாக எண்ணிக் கொண்டு அதை நம்பி, உடனே மனம் திருந்தி, சாமியாராகும் செட்டியாரைப் பார்க்கும் போதும், கடைசியில் முத்துவைப் பணக்காரனாக்கி, ஜமீன்தார், பார்வதம் ஆகியோர் திடீரென்று மனம் மாறுவதைப் பார்க்கும் போதும் ஏதோ மாய மந்திரப் படங்களில் பார்ப்பதுபோல் இருக்கிறது. தன்னுடைய தம்பிக்குக்கூடச் சொல்லாமல் அவனுக்குப் பெண் பார்க்கப் போகும் அண்ணன்மார்கள் ஜமீன்தார் குடும்பங்களிலும் இருப்பதைச் சினிமாவில் தவிர வேறு எங்கு பார்க்க முடியும்? 'சர்க்கரை ஸ்டாக் இல்லை' என்ற போர்டை மாட்டிக் கொண்டு பலருக்கு முன்னிலையில் ஓட்டை டின்னில் சர்க்கரையைக் கொண்டு வருவதாகக் காட்டுகிறார்கள். எந்தக் கடை முதலாளியும் அவ்வளவு முட்டாளாக அதைக் கொண்டு வர மாட்டான். இதைப் போன்று சில்லறைக் குறைகள் பல இருந்தாலும் கூடிய வரை நம் மனம் கதையோடு ஒத்துச் செல்கிறது.

'புல் புல் தாரா'க் காட்சி, இலட்சுமணர் சிலையை வேட்டியால் இழுத்துச் செல்லும் காட்சி ஆகியவை டைரக்டரின் திறமைக்கு எடுத்துக்காட்டு. மொத்தத்தில் —

'பத்தோடு பதினொன்று.... அதோடு இது ஒன்று' என்பார்களே, அது போலத்தான் இந்தப் படமும்!

ச. ஜெயபாதசுந்தரம்,
கும்பகோணம்



'லவ் இன் சிம்லா', 'ஜங்லி', 'காஷ்மீர் கி கலி' என்று எண்ணிக் கொண்டு உல்லாசப் பயணத்தில் நுழைந்துவிட வேண்டாம். இது ஒரு ரகம். அவை வேறு ரகம். 'பொம்மை'யில் வில்லன்களின் கொட்டத்தை ரசித்தோம். இதிலும் வில்லன்களின் புத்திசாலித்தனத்தை(?)ப் பார்க்கிறோம். கொள்ளையும் கொலையும் செய்யும் கூட்டம் சமுதாயத்தில் எங்கிருந்தால் என்ன? இதோ திரைப்படத்தில் வெட்ட வெளிச்சமாகக் காணுங்கள் என்று பறைசாற்றுகிறார்கள், 'ராக்கெட் யுக'ப் படத் தயாரிப்பாளர்கள். இன்னும் இந்த மோகம் விடவில்லை என்பதற்கு இப்பொழுது வெளி வந்த படங்களே சாட்சி.

உல்லாசப் பயணத்தின் திரைப்படக் கதை இதுதான் :

அத்தையின் கட்டுப்பாட்டுக்கு அடங்கிச் சுதந்திரமின்றி வாழும் செல்வத்துக்கு ஒரு நாள் உல்லாசப் பயணம் செய்யும் வாய்ப்புக் கிட்டுகிறது. வழியில் சாத்தனூர் அணையைப் பார்க்கச் சுதந்திரமாக இறங்கி விடுகிறான். அங்கே உல்லாசப் பயணத்துக்கு வந்த கலா மன்றத்தின் தலைவி மாலாவைச் சந்திக்கிறான்; அவ்வளவுதான்; அவளைக் கண்டதும் அவனுக்குக் காதல் பிறந்து விடுகிறது.

மாலா பணக்காரர்களை வெறுப்பதைக் கண்டு கதாநாயகன் செல்வம் ஏழை முத்துவாக நடிக்கத் தொடங்கி விடுகிறான். பிறகு ஏழை முத்து பணக்காரச் செல்வனாக நடிப்பதும் அவனுக்கு வில்லன்கள் சிவப்பிரகாசமும், சிங்காரமும் தொல்லைகள் கொடுப்பதும் தொடர்கின்றன. கடைசியில் அவன் அத்தை சென்னை வந்து உண்மையை உணர்ந்து, செல்வமும் முத்துவும் ஒன்றென்று தெளிந்து கொள்கிறாள். வில்லன்களுக்குரிய தண்டனை கிடைத்து விடுகிறது. கடைசியில் செல்வத்தின் அத்தை அவனுக்கு மாலாவைத் திருமணம் செய்து வைப்பதோடு கதை முடிகிறது.

ஃ ஃ ஃ

உல்லாசப் பயணம் எப்படி?

ராஜேந்திரனைப் பொறுத்தவரையில் உல்லாசமாக ஆற அமர நடித்திருக்கிறார். திறம்படச் செய்யவில்லை என்றாலும் கச்சிதமாக நடித்திருக்கிறார் என்று திருப்தி கொள்ளலாம். படத்தில் வளைய வளைய வருபவரான விஜயகுமாரியைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல வேண்டும் — சோடை போகாமல் நடித்திருக்கிறார்.

தயாரிப்பாளர்கள் தங்கவேலுவை மறந்து விட்டாலும், தங்கவேலு நகைச்சுவையை விட்டுவிடவில்லை. அப்பழுக்கில்லாமல் செய்திருக்கிறார்.

மேக்கப்காரர் இரக்கம் அதிகம் உள்ளவர் போலும்! எஸ். வரலட்சுமியை எதற்கு வயதான மாமியாக்க வேண்டும் என்று விட்டு விட்டார் போலும்.

எம். ஆர். ராதாவை அறையிலேயே ஆட விட்டு விட்டார்கள். அம்பலத்தில் அவரை விடவில்லை. பாவம்!

பாட்டுக்கள் ஓரிரண்டைத் தவிர எதுவும் மனத்தில் நிற்கவில்லை.

படத்தில் எதிலும் புதுமை ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லையே! ஆனாலும் ரசமான கட்டமும் இல்லாமலில்லை. எஸ். வரலட்சுமியும் ருக்மிணியும் ஒருவர் மாற்றி ஒருவர் முறையிடும் கட்டத்தை டைரக்டர் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

கோச்சு வண்டியில் உல்லாசப் பயணம் கிளம்புகிறோம். பாதியில் குதிரை படுத்து விடுகிறது. பிறகு கட்டை வண்டியில் குஷாலாகப் போகிறோம்.

ஏ. சந்திரசேகரன்,
மாகாணக் கல்லூரி, சென்னை-5




ராஜ யோகம் 13
கதை: தம்பு
சித்திரம்: செல்லம்




பிராணனை வாங்க வந்து விட்டாங்க. பாடம் கேட்டுத் தொலைப்பான்.


வாங்கய்யா வாங்க!
நீ சொல்லிக் கொடுக்கிற அழகு அப்படித் தானுக்கும்

சரியாகச் சொல்கிறாய். ஆள் ஒப்புவிப்பது போலிருக்கிறது. இந்த விஷயங்களை யார் கேட்டாலும், எப்படிக் குடைந்து கேட்டாலும் சரியாகச் சொல்லவேண்டும். ஆமாம், யோகப்பயிற்சி எப்படியிருக்கிறது? ராஜயோகம் எப்போது செய்யப் போகிறாய்?

சீக்கிரத்தில். இப்போது அந்த அறையில் சர்வாங்காசனம் செய்து காண்பிக்கிறேன்!

இந்த நிமிஷமாக அப்படியே இருக்கிறானே? தூங்கிப்போய் விட்டானே?

தொட்டுப்பார்!






வி. மா. முனிரத்தினய்யர்

**கான் சாயும் வெள்ளி மலைக்கரசே நின் கழல் நம்பினேன்**
**ஊன் சாயும் ஜென்மம் ஒழித்திடுவாய் கரூர னுக்கா**
**மான் சாயச் செங்கை மழுவஞ்சாய வனைந்த கொன்றைத்**
**தேன்சாய நல்ல திருமேனி சாய்ந்த சிவக் கொழுந்தே !**

— பட்டினத்தார்

வாசனை வீசும் திருக்கயிலாயத்துக்குத் தலைவனே! கரனூராகிய விரிஞ்சிபுரத்தில் ஓர் அடியவன் பொருட்டு, நினது கரங் களிலேந்திய மானும் மழுவும் வலது பக்கம் சாய, திருமுடியில் தரித்த கொன்றை மலரிலிருந்து தேன் சிந்துமாறு திருமேனி யைச் சாய்த்த சிவக்கொழுந்தே! நின் இணையடியே நம்பினேன். ஊன் சுமக்கும் பிறவித் துயரைத் தீர்த்தருள்வாய் !

**ப**க்தி செய்யும் வழியை மக்களுக்குக் காட்டி உணர்த்துவதற்காகத் தேவர்களும் பூவுலகுக்கு வந்து பல பதிகளில் வழிபாடு நடத்தியதாக ஸ்தல புராணங்கள் கூறும். இவ்வாறு புகழ் பெற்ற ஒரு க்ஷேத்திரம் விரிஞ்சிபுரம். கௌரியும், திருமாலும், கரனும் இங்கு சிவபெருமானைப் பூஜித்ததால் விரிஞ்சிபுரத்துக்குக் கௌரிபுரி, விஷ்ணுபுரி, கரபுரி, கரபுரம் என்ற பெயர்களும் உண்டு. விரிஞ்சன் என்று பிரம்மாவுக்குப் பெயர். பிரம்மா பூஜை செய்ததனால் விரிஞ்சிபுரம் என்ற பெயர் பிரசித்தமாயுள்ளது. கலை மகளின் நாயகனைப்போல் ஆயகலைகள் யாவிலும் தேர்ந்த ஸ்ரீ அப்பய தீக்ஷிதரவர்கள் அவதரித்த ஸ்தலமும் இதுவே. இத்தலத்தி லுள்ள சுயம்பு மகாலிங்க மூர்த்தியின்மேல் கதிரவனின் கிரணங்கள் பங்குனி மாதத்தில் விழுவதால் இத்தலம் பாஸ்கர க்ஷேத்திர என்றும் அழைக்கப்படுகிறது.

எம்பெருமானுக்கு மார்க்கபந்தீசுவர என்பது திருநாமம். வழித்துணை நாத என்று வழங்கி வழிபடப்பெறுபவர். மோட் மார்க்கத்துக்கு வழிகாட்டி உற்ற துணைவரு உடன் வருவதோடு, பிரயாண காலத்தி உடன் வந்தும் உதவி செய்திருக்கிறார் சுவாமி தனபாலன் என்னும் குந்தல தேசத்து வணிக பக்தனின் வேண்டுகோளுக்கு இணங்கி ஈசுவரன் ஒரு குதிரை வீர னாக வந்து திருடர்களிட மிருந்து அவனது பொருட் பொதிகளை மீட்டுக் கொடுத்து அவனைக் காஞ் சித் தலம் வரையில் கொண்டு போய் விட்டு வந்ததாலேயே வழித்துணை நாதரெனப்பெயர் பெற்றார்.

திருவண்ணாமலையில் சிவ பெருமானின் முடி காண வொண்ணாது அயர்ந்த அய னின் குறையைத் தீர்க்கத் திருவுளம் கொண்டார் சுவாமி. ஈசனின் சிரம் கண்டதாக அயன் பொய் கூறியதற்காக அவனை மானுடனாகப் பிறக்க வேண்டுமெனச் சபிப்பதுபோல இயன் சபித்து, அந்தச் சாபத்தினுள்ளேயே அயனுக்குத் தமது முடியைக் காட்டவேண்டும் என்ற வரத்தை யும் மறைத்து வைத்தார். சதுர்முகன் விரிஞ்சி யம்பதியில் எம்பெருமானுக்குத் தொண்டு செய்யும் தூய ஆதிசைவ மரபினருள் சிவ நாதன் என்பானுக்கும் நயனநந்தினி என்னும் நங்கை நல்லாளுக்கும் பாலகனாய் அவதரித் தார். சிவசர்மன் என்று குழந்தைக்குப் பெயரிடப்பட்டது. தந்தை சிவநாதன் சிறிது காலத்திலேயே சிவலோகம் அடைந்தான். இக்குற்ற நயனநந்தினி சிவசர்மனுக்கு உப நயனம், சிவதீட்சை முதலியன செய்வித்துத் தன் பர்த்தாவின் பாகப்படி ஆலயத்தில் பூஜைசெய்ய உதவுமாறு தாயாதிகளைக் கேட் டுக் கொண்டாள். பாலகனின் பூஜா உரிமை பாகத்தையும் காணியாட்சியையும் அப கரிக்க எண்ணிய அறுபது வீட்டவர்களும் அதற்கு இணங்கவில்லை. மாறாக சிவ தீட்சை பெறாச் சிறுவனை சிவசருமனை விளையாடும் வழியில் மறித்தனர். "உன் தந்தை காலமானது முதல் நாங்களே ஈசனுக் குப் பூசை செய்து வருகின்றோம். ஆதலின் உனது சொத்துக்கள் யாவும் எங்களுக்குச் சேரவேண்டியவை. நீ என்ன செய்வாயோ, நாளைக்குள் தீட்சை பெற்று பூஜை எடுத்துக் கொள்ளாவிடில் உனக்குரிய நிலம் முதலிய வைகளை எமக்கு எழுதித் தர வேண்டும்" என்று நிர்ப்பந்தம் செய்தனர்.

பாலகன் மூலம் செய்தி அறிந்த தாய் நந்தினி தனக்கு மனித சகாயம் நிச்சயம் இல்லை என உணர்ந்தாள். இனி தெய்வமே துணை என நம்பி, நம்பிக்கை முழுவதையும் எம்பிரான் மீதே செலுத்தினாள். மனம் மிக வருந்தி மந்திரத்திலுறையும் மகேசுவரனை யடைந்து தன் குறையிரக்குமாறு முறையிட்

ன். அபலையான அந்தக் கைம்பெண்ணின் ல் இறைவன் உள்ளம் கரைந்தது. அன்றிரவு பெருமான் அவளது கனவில் தோன்றி, ரானே உன் சுதனை நம்மாலயப் பிரம்ம ர்த்தத்தில் மங்கள நீராட்டுக; அதன்பின் ம் வழி காட்டுவோம்'' என உறுதிமொழி றி மறைந்தார்.

மறு நாள் பொழுது விடிந்தது. ஈசனின் கட்டளைப்படி நந்தினி தன் மகனைக் குளத்தில் நீராட்ட அழைத்துச் சென்றாள். தீட்சை பெறாத பாலகன் இங்கு ஆலய பூஜை செய்வது நடவாத காரியம் என்று தாயாதியர் நினைத்தனர். திருவாயிற் கதவைப் பூட்டி வழி அடைத்தனர். பாலகனுக்கு யாருமே பிரம்மோபதேசமும் தீக்ஷையும் அளிக்கவொட்டாமலும் தடுத்தனர். ஆனாலும் இறைவனின் கருணை எண்ணத்தை யார் தடுக்க முடியும்? தீர்த்தக் கரையில் பரமனே ஒரு கிழவர்போல் திடுமெனத் தோன்றிப் பாலகனுடன் மூழ்கி ஒரு முகூர்த்த காலத்துக்குள் பிரம்மோபதேசம், சிவதீட்சை யாவும் அருளினார். கரையேறியதும் பிரம்மதீர்த்தக் கரையில் மஹாலிங்கமாக மறைந்தார். (பிரம்ம தீர்த்தக் கரையில் பிரம்மபுரீசுவரர் ஆலயத்தை இன்றும் காணலாம்.)

சிவசர்மன் பூஜை செய்வதற்குரிய தீட்சை பெற்றவனாகக் கரையேறுதலைக் கண்ட யாவரும் வியப்படைந்தனர். அதை விடப் பெரு வியப்பாகச் சுற்றுப்புற மன்னர்கள் பலரும் பாலனுக்காகச் சிவிகை முதலிய உபசாரங்களுடன் குழுமினர். நந்தினியின் கனவில் தோன்றிய சுவாமி அவர்கள் கனவிலும் தோன்றிக் கட்டளை இட்டிருக்கிறார். அவர்கள் பாலனை சகல விருதுகளுடன் யானை மீது ஊர்வலமாக அழைத்து வந்து கோயிலின் முன் நிறுத்தினர். இவ்வளவு நடந்த பின்னும் தாயாதியரின் அறிவுக் கதவு திறக்கவில்லை. ஆலயக் கதவை அவர்கள் திறக்க மறுத்தனர். ஆனால் ஆண்டவன் அருளினால் பூட்டப்பட்டிருந்த திருவாயிற் கதவுகள் தாமாகத் திறந்து கொண்டன.

சிவசர்மன் நீண்ட காலம் பூஜை செய்து பழகியவன் போல் ஆகமவிதிப்படி பூர்வாங்கங்கள் யாவும் முடித்தான். ஆண்டவனே ஆசாரியனாக வந்து உபதேசித்ததால் தீட்சை முறை அவ்வளவு ஆழமாக அவன் அறிவில் பதிந்திருந்தது. கையில் திருமஞ்சனக் குடத்துடன் பகவானுக்கு அபிஷேகம் செய்ய விரும்பிப் பக்தியுடன் மஹாலிங்கத்தை அணுகினான். இந்நேரம் சோதனைகளை வெல்லாம் தீர்த்த சுவாமி இப்போது சோதனை செய்தார்.

உயரமான அந்த லிங்கத்தின் திருமுடி பாலகனுக்கு எட்டவில்லை. ''எந்தையே! எனக்கு எட்டவில்லையே நும் முடி!'' என்று உருகி நின்றான் பால பக்தன். ஐயன் மனம் இரங்கினார். லிங்கத்தின் திருமுடி மெல்ல மெல்லச் சாய்ந்து வந்து பாலன் கை உயரத்தில் நின்றது. சிறுவன் அபிஷேகம் செய்ய, 'அபிஷேகப் பிரியன்' என்றே பெயர் பெற்ற சிவபெருமான் அதனை அன்போடு ஏற்றுக் கொண்டார்.

அதே கோலத்தில் இன்றும் முடிசாய்ந்த மகாலிங்கமாக ஸ்ரீ மார்க்கபந்தீசுவரர் காட்சியளிக்கின்றார். பாலபக்தனை பிரம்மாவுக்கு ஈசுவரன் தன் திருமுடி வளைத்துப் பூஜையை ஏற்றுக் கொண்ட நாள் கார்த்திகைக் கடை ஞாயிறு ஆனபடியால், அது முதல் பிரதி கார்த்திகை மாதமும் கடைசி ஞாயிறில் விரிஞ்சிபுரத்தில் திருவிழா நடந்து வருகிறது. இவ்வருஷம் டிசம்பர் 13ந் தேதி இப் புனித நாள் திருவிரிஞ்சிபுரத்தில் கொண்டாடப்படுகிறது.

இந்தத் திருநாளுக்கு இன்னொரு விசேஷம் உண்டு. இறைவன் திருமுழுக்குப் பெற்ற அன்றைய தினம் ஆலயத்தில் உள்ள சிம்மக் குளத்தில் முழுக்காடும் பெண்கள் பெரும் பலன் பெறுகின்றனர். கௌரி தேவி உற்பத்தி செய்ததாகக் கூறப்படும் இக்குளம் ஸ்ரீ ஆதி சங்கராசாரியாரால் பீஜாக்ஷர பிரதிஷ்டை செய்யப்பட்டது. பைசாசம் முதலிய நிகாந்ரால் பீடிக்கப்பட்டோர் இத்தீர்த்தத்தில் மங்கள நீராடி ஈரத் துணியுடன் பகவான் முன் தண்டனிட்டபடியே நித்திரை செய்தால் காற்று கருப்புகள் அறவே விலகுவது பிரத்தியட்ச அநுபவம். சந்ததி வாய்க்காத பெண்கள் இவ்வாறே முழுகி, உறங்கினால் அவர்கள் கனவில் ஒரு விருத்த வேதியர் தோன்றிப் பிரசாதங்கள் தருவதாயும், பின்னர் அவர்கள் கர்ப்பம் தரித்துச் சந்ததியை அடைவதாகவும் கூறப்படுகிறது. இந்தப் பெண்கள் அடுத்த ஆண்டு இங்கு வந்து தொட்டில் — பிள்ளை பிரார்த்தனை செலுத்துகிறார்கள். கனவு வாய்க்காத பெண்களுக்குக் கர்மவினை அதிகமென்றும், அவர்களுக்கு ஒருகாலும் சந்ததி வாய்ப்பதில்லை என்றும் சொல்கிறார்கள்.

புராணப் பிரசித்தியோடு கலை அழகும் மிகுந்த கோயில் விரிஞ்சிபுர ஆலயம். 'திருவாரூர் தேரழகு; திருவிரிஞ்சை மதிலழகு' என்று பழமொழி உள்ளது.

இந்த அழகுகளை அநுபவிக்க அதிக சிரமம் தேவையில்லை. விரிஞ்சிபுரம் வேலூருக்கு மேற்கே ஏழு மைலில் ரயில் மார்க்கத்திலும் பஸ் மார்க்கத்திலும் அமைந்துள்ளது.

அடியார்கள் வழித்துணை நாதனைக் கார்த்திகை கடை ஞாயிறில் கண்டு கடைத்தேற வழிகாண வேணும்.



"குரல் ஒலியை பிரதிபலிக்கச் செய்வதே எனது கலையின் முக்கிய குறிக்கோள். லட்சக் கணக்கான ரசிகர்களை நான் பெறுவதற்கு, அது ஒரு சாதனம்—எனவே, அதைப்பற்றி அனைத்தையும் அறிந்து கொள்வதையே தொழிலாகக் கொண்டுள்ளேன். பிலிப்ஸ் ரேடியோக்கள் அளிக்கும் அசல் குரல் ஒலியில் நம்பிக்கை கொள்ளவும் அறிந்துள்ளேன்."

டி. எம். சௌந்தரராஜன்
தென்னிந்திய திரைப்பட உலகில் முன்னணியிலிருக்கும் இனிமையுடன் இரஞ்சகமிருந்து அற்புதமான சாரீரம் கொண்ட பின்னணிப் பாடகர்.

பிலிப்ஸை உலகெங்கும் நாடுகின்றனர். பிலிப்ஸ் ரேடியோ ஒன்றில் தான் பிரத்தியேகமான இக் குணங்களைக் காணலாம்; தனி சிறந்த 'நோவோஸோனிக்' அம்சங்கள்- நாகரிகத்தின் சின்னமான 'ஸோலைன்' அமைப்பு நாடெங்கும் உங்களுக்குத் திறமையான சேவையளிக்க, பிலிப்ஸ் தொழிற்சாலைகளில் தேர்ச்சி பெற்ற பிரத்தியேக டீலர்கள்.

# பிலிப்ஸ்
நோவோஸோனிக்
# ரேடியோ




ஈடற்ற தரம் ★ எண்ணற்ற வகைகள்

JWTPHR 1680

# வளரும் விஞ்ஞானம்

**நா**ம் இதுவரையும் தண்டவாளத்தின்மீது ரயில் வண்டிகளும் டிராம் வண்டிகளும் ஓடத்தான் பார்த்திருக்கிறோம். இப்போது ஜெர்மனியில் ஹில்டென் என்ற ரயில்வே நிலையத்தில் டயர் போட்ட ஒரு மோட்டார் வந்து நின்றது. அதைக் கண்ட பிரயாணிகள் ஆச்சரியமடைந்து போனார்களாம்!

இது ஒரு புது மாதிரியான கார். இது தரையிலும் ஓடும், தண்டவாளத்தின் மீதும் ஓடும். ஒன்றிலிருந்து ஒன்றுக்கு மாற ஒரு கைப்பிடியைப் பிடித்து இழுத்தால் போதும். இதன் வேகம் எப்படித் தெரியுமா? வழக்கமாக ஓடும் ரயில், மோட்டார் கார்களை விட அதிக வேகமாக ஓடக் கூடியதாம்!

ஜெர்மனியில் இதைப் பார்த்த ரயில்வே இலாகாக்காரர்கள் மிகவும் திருப்தி அடைந்திருக்கிறார்களாம். ஏன் தெரியுமா? ரயில் விபத்து ஏற்படும் காலங்களில் தவிக்கும் பிரயாணிகளை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குக் கொண்டு செல்ல இது மிகவும் உதவியாக இருக்குமல்லவா!

**பு**து வித மோட்டார் காரைப் பற்றி அறிந்ததும், மனம் சாதாரண மோட்டார் கார்களையும், அதை ஓட்டுபவர்களையும் பற்றி நம் சிந்தனை தானாகவே செல்கிறது. மோட்டார் ஓட்டிகள் உலகெங்கிலும் ஒரே மாதிரி தான் இருப்பார்கள் போலிருக்கிறது. இல்லையென்றால் மேற்கு ஜெர்மனியில் மோட்டார் விதியை மீறி ஓட்டுபவர்களைக் கையும் மெய்யுமாகப் பிடிக்க இந்தப் புது வித சாதனம் அமுலுக்கு வருவானேன்?



ஒரு மோட்டார் ஓட்டிமீது 'ஸிக்னல்'படி வண்டி ஓட்டவில்லை என்று குற்றம் சாட்டப்பட்டதாம். 'ஸிக்னல்' கம்பத்துக்கு அண்மையில் எந்தப் போலீஸ்காரரையும் காணாததால் தம் குற்றத்தை நிரூபிப்பது கஷ்டம் என்று கருதித் தம் குற்றத்தை மறுத்தாராம். உடனே அவரிடம் ஒரு போட்டோவைக் காண்பித்தார்கள். அதில் சிவப்பு விளக்கு எரிந்துகொண்டிருக்க போதும் அவர் 'டிராபிக்' கோட்டைத் தாண்டி வண்டியை ஓட்டி விருப்பதும், காரின் நம்பர் தகடும் காணப்பட்டன! அந்த மோட்டார் ஓட்டி இனி குற்றத்தை ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்?

இம்மாதிரி தானே இயங்கி, தவறு செய்யும் மோட்டார் வண்டிகளைப் போட்டோ பிடிக்கும் காமிராக்கள் மேற்கு ஜெர்மனியில் ஐந்து இடங்களில் வைக்கப்பட்டிருக்கின்றனவாம். இந்தக் காமிரா ஒரு செகண்டுக்குள் இரண்டு படங்களை எடுத்து விடுகிறது. இந்த இரண்டு படங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் மோட்டார் ஓட்டி தவறு செய்திருக்கிறாரா இல்லையா என்பது தெரிந்துவிடும். இந்தக் காமிரா இருபத்து நான்கு மணி நேரமும் இயங்கிக் கொண்டிருக்குமாம். பச்சை விளக்கு எரியும்போது இந்தக் காமிரா இயங்காது. மஞ்சள் அல்லது சிவப்பு விளக்கு எரியும்போது டிராபிக் கோட்டை எந்த வண்டி ஒரு சிறிது தாண்டினாலும் இந்தக் காமிரா படம் எடுத்துவிடும். இருட்டிலோ 'பிளாஷ்' பல்பு வெளிச்சம் போட்டுப் படம் எடுத்து விடும்.

இந்த ஏற்பாட்டினால் போக்குவரத்துக் குற்றங்கள் பெரிதும் குறைந்து விபத்துகளும் குறையும் என்று நிபுணர்கள் எதிர்பார்க்கிறார்கள்.

**“க**ற்றது கைம்மண் அளவு, கல்லாதது உலகளவு” என்று அவ்வையார் கூறினார். அவ்வையார் காலத்தில் விஞ்ஞானம் இவ்வளவு வளரவில்லை. இவ்வளவு தூரம் விஞ்ஞானம் வளர்ந்தபின்னும் அன்று அவ்வையார் கூறிய வாக்கு இன்றும் உண்மையாக இருப்பதைப் பார்க்கும்போது நமக்கு வியப்புத்தான் உண்டாகிறது!

தவளையின் 'கண்'களுக்கு ஓர் அதிசய சக்தி இருக்கிறதாம். தவளையின் கண்கள் தவளைக்கு வேண்டியதை மட்டும்தான் தவளைக்குக் காட்டுமாம்! வேண்டாதவற்றை ஒதுக்கி விடுமாம்! அதாவது தவளையை நோக்கி வரக்கூடிய பொருள்களை மட்டும்தான் தவளையின் கண்கள் பார்க்குமாம். தவளையின் எதிரிலேயே தவளையை விட்டு எதிர்த் திசையில் ஓர் ஈ செல்லுமானால் அதை நோக்காதாம். ஏனெனில் எதிர்த் திசையில் செல்லும் ஈ தவளைக்கு உணவாக முடியாதே!

புதுப் புது இயந்திரங்களைச் சிருஷ்டிக்கும் பொறிஇயல் நிபுணர்கள் தவளையின் கண்களுக்குள்ள இந்த அபாரத் திறமையைத் தங்கள் இயந்திரங்களில் காட்டப் பார்க்கிறார்கள்!

அமெரிக்காவில் நியூஜெர்ஸி மாகாணத்தில் காம்டென் என்ற ஊரில் ஆர். ஸி. ஏ. நிறுவனத்தார் தவளையிடம் கற்ற இப் பாடத்தைக் கொண்டு புது வகை காம்ப்யூட்டர் இயந்திரத்தைச் சிருஷ்டித்திருக்கிறார்களாம். இவ் வியந்திரம் விமான ஓட்டிகளுக்கும் விண்வெளிப் பிரயாணிகளுக்கும் பெரிதும் உதவியாக இருக்குமாம்.

ஜலதோஷத்தை எதிர்க்க

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சிவப்பு லேபில்

சாப்பிடுங்கள்



சாதாரண ஜலதோஷம்கூட அபாயகரமானது தான். அது உடலைப் பலவீனப் படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பிடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் ஜலதோஷத்தை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ரீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வாராமல் தடுக்கும் சக்தியையூட்டுகின்றன.
எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.








வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை இளக்கி வெளியேற்றி சுவாசப் பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் வாராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது

வார்னர் - இந்துஸ்தான் லிமிடெட், பம்பாய்



# தொழில் உலகின் புது விழிப்பு

சென்னையில் சமீபத்தில் 'ரோட்டரி' சங்கங்களின் ஆதரவில் நடைபெற்ற தொழில்–வர்த்தக சமூக – உறவுகள் மகாநாடு இரண்டு வகைகளில் முக்கியத்துவம் வாய்ந்தது. தொழில் சமூகத்தினரிடம் தோன்றியுள்ள புத்துணர்ச்சி முதலாவது. தங்களைப் பற்றிச் சமூகமும் அரசாங்கமும் என்ன நினைக்கிறது? சமூக நலனில் தொழில், வர்த்தகத் துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு உள்ள அக்கறை எத்தன்மையதாக இருத்தல் வேண்டும்? அரசாங்கத்தைப் பற்றித் தொழில் வர்க்கம் என்ன நினைக்கிறது? ஒரு சாரார் மீது மற்றொரு சாரார் குறை கூறி வரும் இப்போதுள்ள உறவுமுறைகளில் முன்னேற்றம் எவ்வகைகளில் காண முயலவேண்டும்? — இம்மாதிரிப் பிரச்னைகளை மனம் விட்டுப் பேசித் தெளிவுபடுத்த இம்மகாநாடு ஏற்படுத்திக் கொடுத்த வாய்ப்பு இரண்டாவது.

இம்மாதிரி மகாநாடு இதுவரை சென்னையில் கூட்டப்பட்டதில்லை என்றே சொல்லலாம். ஆகவே இதர மகாநாடுகளைக் காட்டிலும் இது மாறுபட்டது. விசேஷமானது.

ரோட்டரி ஸ்தாபனத்தின் லட்சியங்களுள் முக்கியமானது தொழிலுக்கும் சமூகத்துக்குமிடையே நல்லுறவை வளர்த்தல். எத்தொழிலாயினும் அத்தொழிலின் மேன்மையை வற்புறுத்துவதுடன், நாணயம், நம்பிக்கை, சமூக சேவா உணர்ச்சி, சமூகத்தினருக்குத் தொழில் நடத்துவோர் செய்ய வேண்டிய கடமை ஆகிய நடைமுறைச் சிறப்புக்களை உணர்த்துவதும் அவர்களின் குறிக்கோள்கள். இந்த லட்சியங்களுக்குட்பட்டுத்தான் சென்னை மகாநாடும் கூட்டப்பட்டது. தென்னகத்திலிருந்து வெவ்வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ள 520 ரோட்டரி அங்கத்தினர்கள் இதில் பங்கு கொண்டனர்.

அறிஞர்களும் அநுபவம் மிக்கவர்களும் கருத்துக்களை ஒளிவுமறைவின்றி வெளியிட்டனர்.

முன்னாள் நிதிமந்திரி திரு மொரார்ஜி தேசாய் தமது ஆரம்ப உரையில் தொழில்கள் எல்லாம் சமூக நலனைக் கருதியே நடைபெற வேண்டும்; சமூகத்தை வாட்டி எடுக்கும் விதத்தில் தொழில் நடத்துவது தன்னலமே ஆகும் என்று விளக்கி, சர்க்காருக்கு வரி கொடாது ஏய்ப்பது சமூக விரோதச் செயல் என்று குறிப்பிட்டார். தொழில் வளர்ச்சி இக்காலத்தில் வேகமாக விரிவடைந்திருப்பதுடன், அவற்றின் அமைப்பு, செயல் முறை முதலீடுகள், பொறுப்புகள், கட்டுப்பாடுகள் எல்லாம் முற்றிலும் மாறுபட்டிருப்பதை விரிவாகச் சுட்டிக்காட்டி டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர், வர்த்தகர்களிடமும், தொழில் அதிபர்களிடமும் சமூக சேவா உணர்ச்சி வேரூன்றி வளர வேண்டும். அப்போதுதான் தொழில் வர்க்கம் தமக்குள்ள நாணயத்தையும் செல்வாக்கையும் நிலைநாட்டிக் கொள்ள முடியும் என்று பல உதாரணங்

வந்திருந்த பிரமுகர்களில் ஒரு பகுதி

மகாநாட்டில் ராஜாஜி உரையாற்றுகிறார்



களுடன் சுவைபடக் கூறினார்: ஏறக்குறைய இதே முறையில் பேசிய முன்னாள் அட்வகேட்–ஜெனரல் திரு எம். ஸி. செதல்வாட் வர்த்தகர்கள் உணவு நெருக்கடி நிலைமையில் நடந்து கொண்ட விதத்தைச் சற்று வருத்தத்துடனேயே கண்டித்தார்.

தனியார் துறைத் தொழிலுக்குப் பெருமளவு சுதந்திரம் வேண்டும் என்று சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் வலியுறுத்தும் திரு ஏ. டி. ஷ்ராஃப் திட்டமிடுவதைத் தாம் எதிர்க்கவில்லை என்றும், திட்டங்களை எவ்வாறு வகுக்க வேண்டும், எவ்வாறு நிறைவேற்ற வேண்டும், எந்தெந்த இனங்களுக்கு உயரிடம் கொடுக்க வேண்டும் என்பன போன்ற அம்சங்களில் மட்டுமே தமக்கும் அரசாங்கத்துக்கும் அபிப்பிராய பேதம் இருக்கிறதென்பதையும் தெளிவுபடுத்தினார். வர்த்தக சமூகம் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டிய அவசியத்தையும் குறிப்பிட்டார்.

அந்நியச் செலாவணி சம்பாதிக்க வேண்டுமென்ற ஆர்வத்தில் வெளிநாட்டு வர்த்தகத்தில் சுறுசுறுப்புடன் ஈடுபட்டுள்ளவர்களுக்கு நாணயம், நேர்மை, தர உயர்வு முதலியவை மிகவும் அவசியம் என்பதைத் தொழிலதிபர் திரு ஏ. எம். எம். முருகப்பச் செட்டியார் தத்துவ ரீதியில் விளக்கி வைத்தார்.

தொழில் வர்த்தகத்தினர் சார்பில் பேசிய திரு எஸ். நாராயணஸ்வாமி அரசாங்கத்தின் கடுமையான வரிமுறைகளையும் கட்டுப்பாடுகளின் கொடுமைகளையும், பல பொருள்களின் விலை உயர்வுக்குச் சர்க்கார் நடவடிக்கைகள் எப்படிக் காரணமாகின்றன என்பதையும் மிகத் தெளிவாக எடுத்துக் கூறினார். தொழில் சமூகத்தினரிடையே நிலவும் நிச்சயமற்ற தன்மையை எடுத்துக்காட்டி, யாராவது ஓர் அமைச்சர் ஸ்திரமான கொள்கையை வகுக்க முன்வரமாட்டாரா என்று ஏக்கத்துடன் கூறினார்.

சுதந்திரக் கட்சி மக்கட்சபை அங்கத்தினர் திரு எம். தாண்டேகர் தொழில் வர்த்தகத்தினரின் நடவடிக்கைகள் அரசாங்கத்தின் நியதிகளால் எப்படிப் பாதிக்கப்பட்டுள்ளன என்பதை அரசியல் சட்ட மேற்கோள்களுடன் ஆணித்தரமாக விளக்கிக் கூறினார். சர்க்கார் நிர்வாகத் துறையில் புகழ்பெற்ற திரு ஏ. டி. கோரவாலா காங்கிரஸ் நிர்வாகத்தில் அரசியல் தலைவர்களும் தொழில்துறைத் தலைவர்களும் கையாளும் முறைகள் எவ்வளவு தவறானவை என்பதை வன்மையாகக் கண்டித்தார். காங்கிரஸ் கட்சியில் செல்வாக்குள்ளவரும், லஞ்ச ஒழிப்புப் பிரச்னையில் விசேஷ கவனம் செலுத்தியுள்ளவருமான திரு கே. சந்தானம், கம்பெனிகள் அரசியல் கட்சிகளுக்கு நன்கொடை அளிப்பதை எப்படியும் தடுக்க வேண்டும் என்றும், தொழிலதிபர்கள் இத்துறையில் முதல் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டார்.

தற்போதுள்ள திருப்தியற்ற நிலைமையை விளக்கிச் சொன்னால் மட்டும் போதாது. அதற்குப் பரிகாரம் காண வேண்டும் என்ற கருத்துடன் தலைவர் ராஜாஜி சாத்தியக்கூறான ஆலோசனை சொன்னார். சட்ட மன்றங்களில் தொழில் வர்த்தகத்தினருக்குத் தனியாகப் பிரதிநிதித்துவம் இல்லாததாலேயே இப்போதுள்ள நிலைமை தோன்றியுள்ளது. ஆகவே, ராஜ்ய சபையைப் பொருளாதாரக் கவுன்ஸிலாக மாற்றியமைத்துத் தொழில் துறை நிபுணர்களுக்கு அதில் போதிய இடம் அளித்தால் தான்தோன்றித்தனமாகச் சட்டமியற்றப்படும் நிலை மாறி முன்னேற்றம் காணலாம் என்று எடுத்துக் காட்டினார்.

அமைச்சர் எஸ். கே. பாட்டீல் தனியார் துறை – சர்க்கார் துறை என்ற பாகுபாடே இப்போதுள்ள சூழ்நிலையில் அர்த்தமில்லாது போய்விட்டது என்று கூறியதுடன் தொழிற் கொள்கையைப் பற்றிப் பல ஆண்டுகளுக்கு முன் நிறைவேற்றப்பட்ட நிர்மாணம்கூட இப்போது பொருளற்றுப் போயிற்று என்று சொன்ன போது கூடியிருந்த அனைவரும் கரகோஷத்துடன் அவர் கூற்றை ஆமோதித்தனர். உணவுப் பிரச்னையைப் பற்றிப் பேசுகையில், உற்பத்தியில் குறைவு இல்லை; விநியோகத்தில்தான் குறைபாடு ஏற்பட்டுள்ளது; வியாபாரிகள் பூரண ஒத்துழைப்புத் தரவில்லை என்று பொருள்படச் சொன்னார். தொழிலும் வர்த்தகமும் சமூகத்தினருக்காகவே ஏற்பட்டவை. சமூகமும் தொழிலை நம்பித்தான் வாழ்கிறது. ஒன்றுக்கொன்றுள்ள இந்தப் பரஸ்பரத் தொடர்பை புறக்கணிக்க முடியாது என்ற உண்மையைத் திரு பாட்டீல் சுவையுடன் விளக்கினார்.

மகாநாடு முடிவில் நிர்மாணம் ஒன்றும் நிறைவேற்றப்படாதது குறிப்பிடத்தக்கது. தற்போதுள்ள நிலைமையைக் கண்ணாடிபோல் பிரதிபலிப்பதன் மூலமே புது விழிப்பை உண்டாக்கி, அதன் மூலம் சீர்திருத்தத்துக்கு வகை செய்ய முடியும் என்ற கருத்துடன் கூட்டப்பட்ட இம்மகாநாட்டின் லட்சியம் நிறைவேறியதாகவே எண்ண வேண்டும். இதைத் திறம்பட நிர்வகித்த ஸ்டாண்டர்டு மோட்டார் திரு கே. வி. சீனிவாசன், கார்பொரண்டம் யூனிவர்சல் கம்பெனி திரு எம். வி. அருணாசலம், மற்றும் அவர்களுடன் ஒத்துழைத்த ரோடரி அங்கத்தினர்களைப் பாராட்ட வேண்டும். —எம். எஸ். சிவஸ்வாமி

ஏ. டி. ஷ்ராப்



தாண்டேகர்



எஸ். கே. பாட்டீல்



# பாமினிப் பாவை



விஜய நகரத்துக் கடை வீதிகளிலுள்ளோரின் கவனத்தைக் கவர்ந்து விட்ட யூசப்கானுக்கு இப்போது திரும்பிய பக்கமெல்லாம் வரவேற்புக் கிடைத்தது. செல்வம் கொழிக்கும் அந்த நகரத்தின் சிறப்புமிக்க பகுதிகளைத் தொடர்ந்து சுற்றி வரலானான். அராபியர் ஏறிவந்த ரதத்தின் குதிரைகளை அடக்கி நிறுத்திய அருஞ்செயலைப் பற்றிய செய்தியெங்கும் பரவி விடவே அவனை மதிப்போடும் மரியாதையோடும் வரவேற்று உபசரித்தார்கள். அவன் அறிந்து கொள்ள விரும்பி ஆர்வங்காட்டியவற்றைப் பற்றியெல்லாம் விவரமாக விளக்கினார்கள். இந்த நிலை பல. புதிய விஷயங்களை அறிந்து கொள்ளுவதற்கு அனுகூலமாக இருந்தது அவனுக்கு.

பாமினி சுல்தான்களின் போர்த் திட்டத்தை அறிந்து எந்த நிமிடமும் அதை எதிர்பார்த்தே இருக்கிறது இந்து சாம்ராஜ்யம் என்ற உண்மையைத் தெரிந்து கொள்ள அதிக சிரமமிருக்கவில்லை யூசப்கானுக்கு. பொன்னும் பொருளும் கொழிக்கும் அங்காடிகளைக் கொண்ட ஐந்தாவது கோட்டையை அடுத்து ஆறாவது கோட்டையினுள் அமைச்சர் மண்டலத் தலைவர், பிரபுக்கள், தானாதிபதி, சேனாதிபதி, அரசாங்க அலுவலாளர், அவைப் புலவர்கள், நடனமாதர், கலைமகளிர், கலைஞர்கள் ஆகிய பெருங்குடி மக்கள் வதியும் மாடமாளிகைகளையும் கூடகோபுரங்களையும் கண்டு களித்த பின் கால் ஓய்ந்து போய்த் தனது விடுதிக்குத் திரும்பிய யூசப்கானுக்கு அங்கே வியத்தகு செய்தியொன்று காத்திருந்தது. விஜயநகரத்து அரண்மனை அதிகாரி ஒருவர் - யூசப்கானின் வருகைக்காகக் காத்திருந்தவர் - அவனைக் கண்டதும் ஆர்வமுடன் அருகில் வந்து அவன் உடனே தன்னுடன் கிளம்பி வர வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். ஆறாவது கோட்டையினுள் இருக்கும் விசேஷ விருந்தினர் மாளிகையில் அவன் தங்குவதற்கான வசதிகளைச் செய்து கொடுக்குமாறு மகாமண்டலேசுவரர் ராமராயர் உத்தரவிட்டிருப்பதாகவும், மறு நாள் காலை அவனையே காண ஆவலோடிருப்பதாகவும் தெரிவித்து நின்றார் அதிகாரி. அப்போதிருந்த யூசப்கானின் மனோநிலையை விவரிக்க வார்த்தைகளால் ஆகாது. அரண்மனைக்குள் போவது எப்படி என்பதைப் பற்றிக் குழம்பிக் கொண்டிருந்தவனுக்கு இப்படி அரண்மனையிலிருந்தே ஓர் அழைப்பு வருவதென்றால்? எத்தனை வேகமாக, தனக்குச் சாதகமாகக் காரியங்கள் நடைபெறுகின்றன என்று எண்ணி வியந்த போதே, இதன் முடிவு அபாயத்தின் எல்லையாக இருக்குமோ என்று தயங்கித் தவிக்கவும் செய்தது மனம்.



# கௌசிகன்

## 20. புதிர் மங்கை

அரண்மனை போன்ற விசேஷ விருந்தினர் விடுதியில் பூசப்பாணைக் கொண்டு சேர்த்து விட்டு மறு நாள் காலை வருவதாக விடை பெற்றுக் கொண்டார் அதிகாரி. அன்று இரவு பூசப்பாண் தூங்கவே இல்லை. அவன் கண்ட விஜயநகரத்தின் வளப்பமிக்க காட்சிகளைத் தான் சிந்தனை அசை போட்டுக் கொண்டிருந்தது. மறு நாள் அரண்மனைக்குள் நுழையப் போகிறோம் என்ற ஆனந்தத் தவிப்போடு அங்கு தன் வேஷத்துக்கு ஏற்ப எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி உள்ளத்திலுள்ளேயே ஒத்திகை பார்த்துக் கொள்ளலானான். சந்தேகம் தோன்றாதபடி, சரளமாக, சாதுரியமாக எப்படிப் பேசிப் பழக வேண்டும் என்றெல்லாம் திட்டமிட்டுக் கொண்டான். வியாபாரியின் வேஷத்துக்கு ஏற்ப லக்கணையாகப் பொருள்களைக் கொண்டு

செல்ல வேலைப்பாடமைந்த இரண்டு பேழைகளைத் தயார் செய்தான். போர்த்துகீசியக் கப்பல் அதிகாரியும் துறைமுக அதிகாரியும் அவனைப் பாராட்டிப் பரிசாக அளித்த பொருள்களில், ஐரோப்பிய நாகரிகத்தின் மேன்மையை விளக்கும் விலை மதிப்பற்ற வேலைப்பாடமைந்த ஆபரணங்கள் சில இருந்தன. அவற்றையும் கோல்கொண்டாவின் குதப்ஷா தம் பொக்கிஷத்திலிருந்து அள்ளிக் கொடுத்திருந்த அணி மணிகளுடன் ஒழுங்கு படுத்தி வைத்துக் கொண்டான். விடியும் நேரத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கும் தன் துடிப்பை நினைத்த போது அவனுக்கே சிரிப்பு வந்தது. போர்க்களத்திலே, வாள் முனையிலே வீரத்தை விலை பேச வேண்டியவன் தான், கம்பளத்தை விரித்துக் கடை பரப்பி அதன் மீது வைர நகைகளை வரிசைப்படுத்தி வாய்ச் சொல் வீரம் பேசும் வியாபாரியாகத் தன்னை மாற்றியுள்ள சூழ்நிலையை எண்ணிய போது சிரிப்பாகத்தான் இருந்தது.

சொல்லிச் சென்றபடியே மறுநாள் குறிப்பிட்ட நேரத்தில் பல்லக்குகள் விடுதியின் முன் வந்து நின்றன. யூசப்கானை அழைத்துச் செல்ல அதிகாரி வந்து விட்டார். அவனுக்கான பல்லக்கிலே அவன் ஏறிக் கொள்ள அதிகாரி தமது சிவிகையில் அமர்ந்தார். வீரர்கள் முன்னும் பின்னும் அணிவகுத்துச் செல்லப் பல்லக்குகள் விஜயநகரத்தின் நடுநாயகமாக விளங்கிய அரண்மனைகள் சூழ்ந்த ஏழாவது கோட்டையை நோக்கிக் கிளம்பின.

ஒரு குறிப்பிட்ட இடத்தில் பல்லக்கிலிருந்து இறங்கி நடக்கலானார்கள். கனவுலகிலே வரும் ஏதோ ஒரு மாய உலகத்துக்குள் போவது போல் இருந்தது யூசப்கானுக்கு. கருங்கற்களால் ஆன கூடங்களையும், வெண்கலத்தாலும் வெள்ளியாலும், பொன்னாலும் போர்த்திய தூண்களையும் சுவர்களையும் — கொண்ட மண்டபங்களையும் வளைவுகளையும் கடந்து வந்தவன் இப்போது தந்தத்தினால் ஆன அறையின் அருகே வந்தான். அந்தப் பெரிய விஸ்தாரமான கூடத்தின் தூண்கள் சுவர்கள், கூரை எல்லாமே தந்தத்தினால் அமைந்திருந்தன. அதன் நடுவே உயர்ந்ததோர் ஆசனத்திலே அந்தக் கூடத்தின் கம்பீரத்துக்கே உரியவராக உட்கார்ந்திருந்தார் மகாமண்டலேசுவரர். யாருடைய பெயரால் பாமினி சுல்தான்களின் நெஞ்சும் நினைவும் நெருப்பாகிப் போகிறதோ அந்த ராமராயரைக் கண்டான் யூசப்கான். வெறுப்பையும் விரோதத்தையும் வளர்த்துக் கொண்டு வேவு பார்ப்பதற்காக வந்திருக்கும் அவனது உள்ளத்திலும் அந்த உருவம் ஒரு மதிப்பையும் மரியாதையையும் ஏற்படுத்தியது. முதுமையிலே இளமை கலந்து விளங்கும் அவரது உடற்கட்டையும் உருவப் பொலிவையும் கண்டு வியப்பெய்திப் போய் நின்று கொண்டிருந்தான் யூசப்கான். திறந்து கிடந்த அவரது பரந்த மார்பிலே வைர வடம் ஒன்று மின்னிக் கொண்டிருந்தது.

அந்தரங்கத்தை யெல்லாம் ஆராயும் ஆற்றல் படைத்த ராமராயரின் காந்தப் பார்வையைத் தாங்க முடியாமல் ஒரு கணம் கலகலத்துப் போய் விட்டான் யூசப்கான். உடனே சுதாரித்துக் கொண்டு திட்டமிட்டிருந்தபடி வெகு வேகமாகச் செயல்படலானான். வியப்பையும் திகைப்பையும் உதறி விட்டு மந்தகாசம் மலர்ந்த முகத்துடன் ஒயிலா இடுப்பை வளைத்துத் தலையைத் தாழ்த்தித் தன் நாட்டு வழக்கப்படி சலாம் செய்து நிமிர்ந்தான்.

''நேற்று கடை வீதியிலே சாகசம் விளைத்தது தாங்கள்தானே?'' சரளமான அராபிய மொழியிலேயே பேசினார் அரசிற்கு முதல்வர். முஸ்லிம் இனத்தவர்களுடன் பல வருடங்கள் நெருங்கிப் பழகியதனால் அது கைவந்த கலை அவருக்கு.

''சிறு செயல்! அதை இவ்வளவு பெரிதாக்கி என்னைக் கௌரவிப்பதைக் கூச்சத்துடன் தான் ஏற்றுக் கொள்ள வேண்டி இருக்கிறது'' என்றான் யூசப்கான் அடக்கமுடன்.

ராமராயரின் முகத்தில் இளநகை தோன்றியது. ''தாங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்? என்ன வியாபாரம்....?''

''என்னைப் பற்றிக் கூற வேண்டுமானால் வியாபாரி என்பதைவிடப் பல நாடுகளைக் காண வேண்டும் என்ற ஆசையால் பாரசீகத்திலிருந்து கிளம்பிய யாத்ரீகன் என்று சொல்வதே பொருத்தமாக இருக்கும். எங்கள் நாட்டுக் குதிரைகளை ஏராளமாக வாங்கும் இந்திய நாட்டை — அதிலும் இந்த இந்து சாம்ராஜ்யத்தைக் காண வேண்டுமென்று வெகுநாளாக ஆசை: அதன் விளைவே.... இந்த என் வரவு!''

''தங்கள் தாய்நாட்டுக்காரரைக் காண வேண்டும் என்ற ஆவலினால்தான் அந்தக் குதிரைகளும் அப்படி விரைந்தோடி வந்திருக்கின்றன போலும்'' என்றார் ராமராயர் மெல்ல நகைத்தபடி. ''உங்களை வியாபாரி என்றுதான் என்னிடம் அறிவித்தார்கள்.... ஆனால் தங்கள் தோற்றத்தையும் உடற்கட்டையும் தங்களுடைய செயலோடு ஒப்பிடும்போது தங்களைப் பண்பட்ட வீரராகத்தான் நினைக்கத் தோன்றுகிறது.''

யூசப்கானுக்குச் சுருக்கென்றது. உடனே சட்டென்று ''தங்கள் பாராட்டுக்கு அருகதையற்றவன் நான். ஊர் சுற்றுவது எனக்கு உவப்பானாலும் வியாபாரியாகத்தான் வாழ்க்கை நடத்துகிறேன். போகுமிடங்களில் கிடைக்கும் அபூர்வமான பொருள்களைச் சேகரிப்பதே எனது ஆர்வமிக்க தொழில். அதுவும் பொன்னும் மணியும் கொண்டு ஆக்கப்பட்ட ஆபரணங்களிலே அக்கறை கொண்டவன். இதோ எனது சேகரிப்புகளில் சிலவற்றைச் சமூகத்தின்பார்வைக்கு..'' என்று கூறித் திரும்பியதும் யூசப்கானோடு வந்திருந்தவரில் ஒருவன் ஓர் உயர்ந்த வேலைப்பாடமைந்த ரத்தின கம்பளத்தை விரித்துக் கடை பரப்பத் தயாரானான்.

அப்போது ராமராயரைக் காண வேறு சிலர் உள்ளே நுழைந்தார்கள். அவர்களின் வரவினாலோ அல்லது சுபாவமாகத்தானோ ராமராயர், ''தங்கள் வியாபாரப் பொருட்களை இங்கு நான் காண்பதைவிட... அந்தப்புரத்தில் அரசியாரின் பார்வைக்கு அவைகளை விருந்தாக்குவதே பொருத்தமாக இருக்கும்;

அட கடவுளே!

என் பணம் போயிடுத்தே!

என் பணம்
சென்ட்ரல்
பாங்கில்
பத்திரமாயிருக்கு

# தி சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா லிட்.

தனியார் துறையில் மிகப் பெரிய இந்திய பாங்கு

இந்தியாவில் 350க்கு மேற்பட்ட கிளைகள் உள்ளன

டிபாசிட் ரூ. 260 கோடிக்கு மேற்பட்டது




SISTA'S S. CBI

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.,
மதராஸ்-17

---

# மூலத்தைச் சுருக்குவதற்குப் புதிய வழி

**அரிச்சலைப் போக்குகிறது • வலியிலிருந்து துரித நிவாரணம் அளிக்கிறது.**

முதல் தடவையாக, விஞ்ஞானம் மூலத்தைச் சுருக்கவும், அரிச்சல், இரத்தப்போக்கு மற்றும் வலியிலிருந்தும், புதியதொரு வலியில்லாத முறையில் நிவாரணம் அளிக்கக் கூடிய மருந்தொன்றைக் கண்டுபிடித்திருக்கிறது.

டாக்டர்களின் கண்காணிப்பில் நடத்தப்பட்ட சோதனைகளும் இதை நிருபித்தன. வலியும் அரிச்சலும் உடனேயே குணப்படுத்தப்பட்டன. மேலும், இதமாக வலியைப் போக்குவதுடன் உண்மையாகவே சுருக்கமும் ஏற்பட்டது.

மேலும், வியக்கத்தக்கதென்னவென்றால் இந்த நல்ல முன்னேற்றம் 10-20 வருடங்களாகப் பாதிக்கப்பட்டவர்களிடமும்கூடக் காணப்பட்டது.

இதன் இரகசியம் ஒரு புதிய குணமளிக்கும் மருந்தாகும்-பயோ-டைன்*-உலகப்பிரசித்தமான ஒரு ஆராய்ச்சிக்கூடத்தின் கண்டுபிடிப்பு. இந்த புதிய குணமளிக்கும் மருந்து ப்ரிப்பரேஷன் H* என்ற பெயரில் களிம்பு வடிவத்தில் கிடைக்கிறது. உண்மையிலேயே மூலத்தைச் சுருக்குவதுடன், ப்ரிப்பரேஷன் H வழவழப்பாக்குவதன் மூலம் மலம் கழிக்கும்போதுள்ள வலியைக் குறைக்கிறது.

நீங்கள் மூலத்தால் அவதிப்பட்டால் ப்ரிப்பரேஷன் H புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு (ஆங்கிலம்-ஹிந்தி) இன்றே கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்: டிபார்ட்மெண்ட் 38, ஜாப்ரே மானேர்ஸ் & கோ லிட்., த. பெ. நிர். 976, பம்பாய்-1

**ப்ரிப்பரேஷன் H** *ட்ரேட் மார்க

P-H-5 TAM

---

குணத்தில் சிறந்தவை

## ஸ்வஸ்திக் வேதாரணியம் புகையிலை

ஸ்பெஷல் தயாரிப்பு

**15 ந. பை.**

**பிளாஸ்டிக் பொட்டலங்கள்**

தவிர நேற்று ரதத்தை நிறுத்திப் பேராபத்தி லிருந்து காப்பாற்றிய உங்களை மறுபடி காண வேண்டுமென்று கூறி இருந்தார்கள். ஆகவே" என்று கூறி அருகிலிருந்தவரிடம், "இந்த அராபிய வைர வியாபாரியைத் தேவியாரின் அந்தப்புரத்துக்கு அழைத்துச் செல்" என்று கட்டளை பிறப்பித்து விட்டு நூசப்கானைநோக்கி "தங்கள் பெயர் என்ன வென்று கூறவில் லையே!" என்றார்.

"என் பெயர் காசிம்கான்" என்றான் நூசப்.

"நீங்கள் போகலாம். பிறகு சந்திப் போம்" என்று விடைகொடுத்து விட்டுக் காத்திருந்த அரசாங்க அலுவலில் மூழ்கிப் போனார் அரவீட்டு முதல்வர்.

விரித்த கம்பளத்தைச் சுருட்டிக் கொண்டு அந்தப்புரத்துக்கு அழைத்துச் செல்லும் அதிகாரியைப் பின்தொடர்ந்தான் நூசப்கான். அந்தப்புரத்தின் காவலாளியான வாளேந்திய வேல்விழியாளிடம் தாம் வந்திருக்கும் காரி யத்தைத் தெரிவித்தார் அதிகாரி. அதைக் கொண்டு உள்ளே ஓடினாள் மற்றொரு காவல் நங்கை. பளிங்கு மண்டபத்தின் அழகிலே தன் மனத்தைப் பறிகொடுத்துப் போய் நின்றிருந் தான் நூசப்கான். சற்று நேரத்துக்கெல்லாம் அவனை அழைத்துச் செல்ல அழகிகள் இருவர் வந்தார்கள். அதிகாரி அந்த இடத்திலேயே விடைபெற்றுக் கொண்டார். நூசப்கான் அழகிகளைப் பின்தொடர்ந்து அந்தப்புரத்தி னுள் நுழைந்தான். திரும்பிய பக்கமெல்லாம் இதயத்தைக் குளிர்விக்கும் இனிய காட்சிகள். வாசமிகு வண்ண மலர்கள் பூத்துக் குலுங் கின. செய்குன்றுகளிலிருந்து அருவிகள் நுரை குதித்து நகைத்து விளையாடிக் கொண் டிருந்தன. பளிங்கு மண்டபங்களையடுத்த பசுஞ் சோலைகளில் தென்றல் புகுந்து இசை யிசைத்துக் கொண்டிருந்தது. விசாலமான கூடங்களையும் நடன மண்டபங்களையும் பூஞ் சோலைகளையும் கடந்து போகும் போது ஆங்காங்கே எழுந்த நங்கையர்களின் நகை யொலி அது அந்தப்புரமென்பதை நினைவு படுத்திக் கொண்டிருந்தது.

ஆழமற்றுத் தெளிந்த நன்னீரைக்கொண்ட செய் குளங்களால் சூழப்பட்டதொரு பளிங்கு மண்டபத்துக்கு நூசப் கானை அழைத்துப் போனார்கள் அந்தப் பாவைகள். அதன் தூண் களிலே மலர்க் கொடிகள் படர்ந்து சுற்றிக் கொண்டிருந்தன. மண்டபத்தின் நடுவிலே உள்ள மேடை மீது ராமராயரின் மூத்த மனைவியாரான திருமலாம்பா தேவியார் உட் கார்ந்திருந்தார்கள். பார்த்தவுடனேயே— முதல் நாள் ரதத்திலே பார்த்த மூதாட்டி யார்தான் அவர்கள் என்பதைப் புரிந்து கொண்டான் நூசப் கான். இரண்டு அணங்குகள் பின்னாலிருந்து சாமரம் வீசிக் கொண்டிருந்தார்கள். அருகே அமர்ந்திருந்த ஒரு பெண் தாம்பூலம் மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அவர்களைத் தவிர அங்கு வேறு யாருமில்லை.

நூசப்கானைக் கண்டதும் முறுவலித்துத் தலையசைத்து வரவேற்றார் தேவி திரு மலாம்பா. முறைப்படி சலாமிட்டு நிமிர்ந்த போது நூசப் கானின் பேழைகள் இரண்டை

**கருணை**

ஒரு முறை நெப்போலியன் ஒரு படை வீரனுக்குக் கடும் தண்டனை விதித்தார். வீரனின் தாய் நெப்போ லியனிடம் வந்து தன் மகனுக்குக் கருணை காட்டும்படி கெஞ்சினாள்.

"அவன் இந்தக் குற்றத்தை இரண் டாம் முறையாகச் செய்கிறான்! நியாயமாகப் பார்க்கப் போனால் இதைவிடக் கடுமையான தண்டனை அவனுக்கு விதித்திருக்க வேண்டும்" என்றான் நெப்போலியன்.

"உங்களிடம் நியாயத்தை யார் கேட்டார்கள்? இரக்கந்தானே காட் டச் சொல்கிறேன்!"

"இரக்கம் காட்டக்கூடத் தகுதி யில்லாதவன் உன் மகன்!" என்றான் நெப்போலியன்.

"மகாராஜா! கருணை என்பது தகுதியைப் பார்த்துச் செய்யப்படுவ தல்ல!" என்றாள் தாய்.

நெப்போலியனின் கல் மனமும் அப்பொழுது இரங்கி விட்டது.

—குட்டிக் கதை

யும் தாங்கி நின்ற பெண்கள் அவற்றைக் கீழே வைத்துவிட்டு அரங்கை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தார்கள். அப் போதுதான் நூசப் கானுக்குத் தன்னுடன் வந்த உதவியாளர்கள் அந்தப்புரத்தின் வெளியிலேயே நிறுத்தப்பட்டு அவர்களிட மிருந்த பேழைகளை இந்தப் பணிப் பெண்கள் சுமந்து கொண்டு தன்னைத் தொடர்ந்து வந்திருக்கிறார்கள் என்று தெரிந்தது.

"நல்ல சமயத்திலே வந்து உதவிய உங் களுக்கு நடு வீதியில் நன்றி தெரிவித்ததோடு என் உள்ளம் திருப்திப்படவில்லை. ஆகவே தான்..." என்று சுத்தத் தெலுங்கிலே பேசிய தேவியாரின் மொழியைப் புரிந்து கொள்ள முடியாமல் விழித்தான் நூசப்கான். அப்போதுதான் திருமலாம்பா தேவிக்கும் தம் தவறு தெரிந்தது. தனக்கும் அந்த அந்நியனின் மொழியில் பரிச்சயம் கிடையாது என்பதை உணர்ந்ததும் சிரிப்புத் தான் வந்தது. உடனே இந்த நிலைமையைச் சமாளிக்கும் தகுதி வாய்ந்தவள் ஒருத்தி தன்னிடம் இருக்கிறாள் என்ற நினைவு வந்த தும், வெற்றிலை மடித்துக் கொண்டிருந்த பணிப் பெண்ணிடம், "உடனே ஓடிப் போய் ஆயிஷாவை அழைத்து வா" என்று உத்தர விட்டாள்.

ஏதும் பேச முடியாமல், பேசியவற்றைப் புரிந்து கொள்ளவும் முடியாமல் தவிப்போடு நின்று கொண்டிருந்தான் நூசப் கான். அந்த ஒவ்வொரு விநாடியும் ஒவ்வொரு யுகமாகத் தோன்றியது அவனுக்கு. அப்போது இருட் குகையிலே ஒளி பரவுவதைப் போல, பாலை வனத்திடைப் பசுஞ் சோலை தோன்றியதைப் போல ஆயிஷா அங்கு வந்தாள். அந்தப் புரத்திலே அந்நிய ஆடவனை அதுவும் ஒரு முஸ்லிம் ஆண்மகனைக் கண்டதும் அந்த அழகி யின் கரங்கள் தோள் மீது சரிந்து கிடந்த

துகிலை எடுத்து மதிமுகத்தை மூடி மறைத்துக் கொண்டது. ஆனால் அந்த ஒளி முகத்தின் அழகை மூடி மறைக்கும் திராணியில்லாத துகில் அதை இன்னும் எடுப்பாக்கித்தான் காட்டியது. அவள் வரவால் அந்த மண்டபமே புதிய சோபை அடைந்தது போலிருந்தது யூசுப் கானுக்கு. இந்துக்களின் அந்தப்புரக் கிளை முகத்தின் அழகைப் பார்த்து, அந்த இளைக் கவர்ச்சியினால் மட்டுமே ஏற்பட்ட எண்ணமல்ல அது. ஆயிஷாவின் அதிசயமான அழகே, ஒயிலான அவளது தோற்றமே அவனது நினைப்புக்குக் காரணமாக இருந்தது.

ஆயிஷாவைக் கண்ட திருமலாம்பா தேவி ''பெண்ணே! உன் உதவியோடுதான் நான் இவரோடு உரையாடியாகவேண்டும். நேற்று கட்டுக் கடங்காமல் ஓடிய ரதத்தை நிறுத்திய தாகக் கூறினார்களே அது இவர்தான். உன் நாட்டவர்தானாம். வியாபாரி என்று கேள்விப்பட்டேன். என்ன வியாபாரம் என்று கேட்டு அவரைப் பற்றி இன்னும் ஏதாவது தகவல் உண்டானால் அறிந்து சொல்.''

ஆயிஷாவோடு தேவியார் பேசிக் கொண்டிருந்தார். ஆனால் அவளோ அந்த வியாபாரியையே வைத்த கண் வாங்காமல் முகத் திரையினூடே இருந்தவாறு நோக்கிக் கொண்டிருந்தாள். அரசியின் வார்த்தைகளை மட்டும் காது வாங்கிக் கொண்டிருந்தது. விழிகளோ அந்த வியாபாரியைத் துளைத்துக் கொண்டிருந்தது. இத்தனை காலமும் இல்லாத ஏதோ ஒரு தவிப்பு, துடிப்பு, அவள் உடலெங்கும் பரவியது. தன் இனத்தவன் என்பதற்கும் மேலாக அவனும் தன் வாழ்வில் ஏதோ ஒரு மாற்றம், மலர்ச்சி ஏற்படப் போகிறது என்று அவளது உள்ளுணர்வு சொல்லியது.

விழிகளால் விழுங்கிக் கொண்டிருக்கும் அந்த எழில்மொழியாளையே இமைக்காமல் பார்த்துக்கொண்டு நின்றான் யூசுப் கான். வேலையும் வாளும், போரும் தவிரப் பெண்களைப் பற்றியே எண்ணாதவனுக்கு ஆயிஷாவின் அழகு புதுமையாக இருந்தது.

அந்தப் பேச்சற்ற நிலை நீடிக்குமானால் விபரீதமாகிப் போகும் என்பதை உணர்ந்தவன் சட்டென்று பேசத் தொடங்கினான். ''நான் பாரசீகத்திலிருந்து வருகிறேன். என்னை வியாபாரி என்பதை விட யாத்திரிகன் என்றே கூறலாம். என்னிடம் உள்ள சில அபூர்வமான அணிகளை அரசியாருக்குக் காட்ட வேண்டுமென்று ஆர்வமுடனிருக்க, என்னை அரசி இங்கு அழைப்பித்தார்'' என்று சொல்லிக் கம்பளத்தை விரித்துக் கடையைப் பரப்பலானான் யூசுப் கான். துபாஷியாகப் பணியாற்ற வந்துள்ள ஆயிஷா அவன் கூறியவற்றை அரசியாருக்கு விளக்கினாள். இதற்குள் யூசுப் கான் மின்னல் ஒளிக் கற்றைகளை ஒன்றாகச் சேர்த்து வைத்தது போன்ற வைர நகைகளையும், நெருப்பாக ஜ்வலிக்கும் ரத்தினங்களையும், பசும் புல் தரையின் செழுமையோடு கூடிய மரகதக் கற்களையும், வானத்தின் வண்ணத்தை நினைவூட்டும் நீலக் கற்களையும் கொண்டு ஆக்கப்பட்ட எண்ணிறந்த ஆபரணங்களை எடுத்துக் காட்டிப் பொருளாக்கினான். அழகிலும் அமைப்பிலும் ஒன்றை ஒன்று மிஞ்சுவதாக இருந்தன. ஒவ்வொன்றைப் பற்றியும் அவன் கூறிய விளக்கங்களைத் திருமலாம்பா தேவிக்கு ஆயிஷா தன் குயிலினும் இனிய குரலில் மொழிபெயர்த்துக் கூறிக் கொண்டிருந்தாள். அதே போலத் தேவியாரின் வார்த்தைகளை அராபிய மொழியாக்கி அவனிடம் கூறிக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் உள்ளமெல்லாம், உணர்வெல்லாம், பார்வையெல்லாம் அந்தப் புதியவனை எடை போட்டுக் கொண்டிருந்தது.

யூசுப் கான் விரித்த கம்பளத்தில் உட்கார்ந்தபடி விலைமதிப்பற்ற பொருள்களை வரிசைப்படுத்துவதற்குச் சாதகமாகத் தன் உடைவாளை எடுத்துப் பக்கத்தில் வைத்திருந்தான். நகைகளை ஒவ்வொன்றாக எடுத்து அதன் அழகைப் பருகிப் பின் அரசியிடம் கொடுத்து வந்த ஆயிஷாவின் முகத்திலே மெல்ல மெல்ல ஒரு புதிய சோபை மலரலாயிற்று. பொருள் பொதிந்த பார்வையால் வியாபாரியை நோக்கலானாள். அப்போது கம்பளத்தின் மீதிருந்த அவனது உடைவாளை — அது காட்சிப் பொருளில்லாது போனாலும் — தற்செயலாக எடுத்துப் பார்த்த போது அவள் கண்கள் மின்னின. எதையோ புரிந்து கொண்டவள் போலப் புன்னகை செய்தாள். அவனது உருவத்தை உற்று நோக்கியபோது அது உறுதிப்பட்டது.

ஆயிஷாவின் அற்புத அழகிலே, அங்க அமைப்பிலே, பேசும் குரலிலே, வீசும் பார்வையிலே, தன்னையே, தன் உணர்வுகளையே பறிகொடுத்தவனாகச் சொக்கிக் கொண்டிருந்தான் யூசுப் கான். திருமலாம்பா தேவியாருக்காகவே அவனது சொல்லும் செயலும் இருந்தாலும் அவைகளைத் துபாஷியாக விளங்கிய ஆயிஷாதான் ஏற்க வேண்டியிருந்தது. ஆகவே அவன் ஆயிஷாவின் மீது பதித்த பார்வையை விலக்க மனமில்லாதவனாக அவளை அழகு என்ற மந்திரத்தால் கட்டுண்டு நின்றான். அதனால் அவன் பார்வையிலே, பேச்சிலே தோன்றிய மாறுதலை அவன் உணரவில்லை.

நகைகளையெல்லாம் பார்வையிட்ட தேவியார் அற்புத வேலைப்பாடமைந்த ஒரு வைர மாலையைக் குறிப்பிட்டு அதன் விலை என்ன என்று கேட்கும்படி ஆயிஷாவிடம் கூறினாள்.

''ஐயா, வைர வியாபாரியாரே! வைத்த கண் வாங்காமல் என்னையே பார்த்துக்கொண்டிருந்தால் தாங்கள் வந்த காரியமும் வியாபாரமும் என்ன ஆவது? அரசியாருக்கு இதன் விலையைக் கூறுங்கள்!'' என்று கூறி அவனைத் தன் நினைவுக்குக் கொண்டு வந்தாள்.

ஆயிஷா குறிப்பிட்ட ஆபரணத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, ''இது விலை மதிப்பற்றது. இதை விற்பதற்கில்லை. ஆனால் அரசியாருக்கு இதை எனது காணிக்கையாகவே கொடுக்க விரும்புகிறேன். ஏற்றுக் கொள்ளச் சொல்லுங்கள்'' என்று கூறி அதை ஆயிஷாவிடம் நீட்டினான், அவ

# சிற்றுண்டி வேளை!




ருசிமிக்க மில்க் சாக்கலேட்டில் புதைந்த
பிஸ்கட்டுகள் — சுவையான ஃப்ரைஸ் மில்க்
சாக்கலேட் டிஃபின்ஸ்—உங்கள் சிற்றுண்டிவேளைக்கு
இதைவிட மிகச் சிறந்தது வேறு எதுவுமே இல்லை.

தயாரிப்பாளர்கள்: Cadbury-Fry

னுக்கே இதைக் காணிக்கையாகச் செலுத்துபவளைப் போல:

அவளிடமிருந்து அந்த அணியைப் பெற்றுக்கொண்ட ஆயிஷா வியப்புப் பார்வையுடன், ''தங்கள் செயலைப் பார்த்தால் உங்களை வியாபாரியாக மதிக்கத் தோன்றவில்லையே'' என்றாள்.

''ஏன்? இந்த வைர மாலையைப் பொருள் பெறாமல் தருகிறேனென்றா? பெரிய லாபங்களை எதிர் பார்க்கும் வியாபாரிகள் சிறிய நஷ்டங்களைப் பொருட்படுத்த மாட்டார்கள்'' என்றான் யூசப் கான்.

''அப்படியானால் ஏதோ பெரிய லாபத்தை எதிர்பார்த்துத்தான் இங்கு வந்திருக்கிறீர்கள் என்று தெரிகிறது'' — குறும்பாகச் சிரித்தாள் குமரி.

''அது வியாபார ரகசியம். அரசியாரிடம் அம்பலப்படுத்த வேண்டாம்'' என்று கெஞ்சுவதுபோல் பாவனை செய்தான் யூசப் கான். இவர்களுக்கிடையே நடந்த இந்தச் சம்பாஷணையைப் பற்றித் தேவியாருக்கு எதுவும் தெரியாது. நகையைப் பற்றித்தான் ஏதோ கேட்கிறாள் என்று நம்பினாள் ராணி. அதே போல ஆயிஷா வைர மாலையைத் திருமலாம்பாளிடம் கொடுத்து, அதை விற்க விரும்பாத வியாபாரி தன் காணிக்கையாக ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டுவதாகக் குறிப்பிட்டாள். முதலில் எதையும் இலவசமாகப் பெற விரும்பாது மறுத்துரைத்த மகாராணி முடிவில் வியாபாரியின் வற்புறுத்தலின் பேரில் அதை ஏற்றுக் கொண்டாள். தன் மகிழ்ச்சியைத் தெரிவித்து விடை கேட்ட அவனிடம் ராணியார், இன்னும் ஏதாவது அணிகலன்கள் வியாபாரத்துக்கு இருக்குமானால் அவற்றுடன் மறு நாள் வருமாறு கூறினார். ராணியின் வார்த்தையை மொழிபெயர்க்க வேண்டிய ஆயிஷாவோ அதைக் குறிப்பிடாமல் வேறு விஷயத்தையே கூறினாள்.

''அபூர்வமான பொருள்களைச் சேகரித்துக் கொண்டு வந்து இலவசமாகத் தானம் செய்துவிட்டுப் போகும் வியாபார வள்ளலே, இன்று நள்ளிரவில் இந்நகரத்தின் நதிக்கரையோரமுள்ள பெரிய சிவன் கோவிலுக்குப் போனால் உங்களிடமுள்ள உயர்ந்த பொருள்களையெல்லாம்விட விலை மதிக்க முடியாததொரு பொருளைப் பெறலாம். அது உங்கள் வீரத்துக்கும் வேஷத்துக்கும் ஏற்ற பரிசாகக் கூட இருக்கும்!'' என்று மோகனமாக ஒரு முறுவலையும் அள்ளி வீசிவிட்டு அரசியாரைப் பார்த்து அமர்ந்து கொண்டாள் ஆயிஷா.

பொருள்களைப் பேழைக்குள் அடுக்கிக் கொண்டிருந்த யூசப் கானை ஆயிஷாவின் வார்த்தைகள் அசையாமல் வைத்துவிட்டன. சவுக்கடி பட்டவனைப் போல் திகைத்துப் போனவன் அவளை வெறித்து நோக்கினான். அவளோ அவன் பார்வையைச் சந்திக்காமல் பாராமுகமாக இருந்தாள். யூசப் கானுக்கு இப்போது அவள் அழகு, பேச்சு, பார்த்த பார்வை எல்லாமே புதிய பொருளைக் கொடுத்து எதையோ புரிய வைக்கவும் முயன்று கொண்டிருந்தன. 'அப்படியானால்.. அப்படியானால்... அவளுக்குத் தன்னைப் பற்றிய ரகசியம் தெரிந்து விட்டதோ?' என்ற நினைப்புடன் உள்ளம் மருகலாயிற்று. ஆனால் ஒன்றுமே செய்ய முடியாத ஒரு நிலை. முகம் காட்டி முறுவலித்தவளோ புறங் காட்டிப் புரியாப் பொருளாக உட்கார்ந்திருக்கிறாள். விடை பெறும் சாக்கிலே பேசினால் பதில் கூறத் திரும்புவாள். அப்போது அவள் முக பாவத்திலிருந்து ஏதாவது புரிந்து கொள்ளலாமோ என்ற ஒரு சபலம் ஏற்பட்டது அவனுக்கு.

''விலை மதிக்க முடியாத பொருளை விரும்பாதவரும் இருப்பார்களோ? பரிசை நாடிச் செல்ல எனக்கு விடை கொடுக்க வேண்டும்'' என்று முறைப்படி வணங்கி நின்றவனுக்கு முகத்தைத் திருப்பாமலேயே அரசியின் பதிலைப் போல ஆயிஷா கூறினாள். ''போய் வாருங்கள், தங்கள் முயற்சிக்குத் தக்க பலன் இருக்கும்.''

ஆயிரம் எண்ணங்களோடு அந்தப்புரத்திலிருந்து தன் விடுதிக்கு வந்த யூசப் கானுக்கு அதன் பிறகு எதிலுமே நாட்டம் செல்லவில்லை. அந்த அதிசயப் பெண்ணின் அற்புத எழிலையும் மர்மமாக அவள் கூறிய வார்த்தைகளையுமே எண்ணி எண்ணி வியந்து கொண்டிருந்தான். இந்த சாம்ராஜ்யத்தின் அந்தப்புரத்திலே அரசியின் அந்தரங்கத்துக்குப் பாத்திரமான ஒரு முஸ்லிம் அழகி. அவளைத் தன் இனத்தவள் என்று உரிமையோடு நம்புவதா, அல்லது வேறு விதமாக எண்ணித் தள்ளுவதா? முடிவு காண முடியாத நிலையிலே வெகு நேரம் குழம்பியவனை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தது அவள் அழகு. ஒளி வீசும் அவளது கரு விழிகளை நினைவுக்குக் கொண்டு வந்தான். அந்தத் துரு துருத்த பார்வை எதையோ சொல்லத் துடித்ததை நினைவு படுத்தியது. விழியால் மொழி பேசிய அந்த வித்தைப் பெண்ணின் வார்த்தையை அலட்சியப்படுத்த விரும்பாதவனாக அன்று நள்ளிரவில் அவள் குறிப்பிட்ட இடத்துக்குச் செல்வதென்று முடிவு செய்தான்.

(தொடரும்)

**வெள்ளித்திரை — நேயர் விமர்சனம்**

அடுத்து விமர்சனத்துக்கு எடுத்துக்கொள்ளப்படும் படங்கள் :

**ஆயிரம் ரூபாய் — அம்மா எங்கே ?**

விமர்சனம் வந்து சேரவேண்டிய கடைசித் தேதி : 19-12-64

நட்சத்திரங்கள் அறிவிக்கின்றன

## உங்கள் வருங்காலம் சந்தோஷமாக விளங்க பஞ்சாப் நேஷனல் பாங்குடன் தொடர்பு கொள்ளுங்கள்

நீங்கள் சோதிடத்தில் நம்பிக்கை உள்ளவரா? பகற் கனவு காண்பவரா? உங்கள் கனவுகள் நனவாக பஞ்சாப் நேஷனல் பாங்க் உங்களுக்கு உதவி புரியட்டும்.

பஞ்சாப் நேஷனல் பாங்க் சேமிப்புக் கணக்கில், தவறாது ஒழுங்காக போடப்படும் தொகைகள் ஆச்சரியமான வகையில் வளர்ச்சி யடைவதுடன், உங்கள் இன்பக் கனவுகள் நனவாவதுபோல உங்கள் வருங்காலம் சந்தோஷமாகவும், திடமாகவும் இருக்க உதவுகிறது. நமது தேச முழுவதிலும் பரவியுள்ள பஞ்சாப் நேஷனல் பாங்கின் 441 காரியாலயங்களில் ஏதாவது ஒன்றுக்கு விஜயம் செய்யுங்கள்; அங்குள்ள ஊழியர்கள் உங்களுக்கு மிக மகிழ்ச்சியுடன் உதவி புரிவார்கள்.

 70-வது ஆண்டின் சேவையில்!

**தி பஞ்சாப் நேஷனல் பாங்க் லிமிடெட்**

நவீனகால இந்திய பாங்குத் தொழிலில் மிகப் பழைய ஸ்தாபனம்




பகவான் ராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் சிலர் வந்து, "நாங்கள் அனைவரும் சமூக சேவையில் ஈடுபடப்போகிறோம்!" என்று கூறினார்கள். இதைக் கேட்டதும் பரமஹம்ஸர், "அப்படியா? ரொம்ப சந்தோஷம். உங்கள் முடிவைப் பாராட்டுகிறேன். சமூக சேவையில் நீங்கள் ஈடுபட வேண்டியது நல்லது தான். ஆனால் முதலில் கடவுளைத் துதித்து உங்கள் உள்ளத்தைத் தூய்மையாக்குங்கள். உள்ளத் தூய்மையோடு கடவுளைப் பிரார்த்தித்தால் நல்லது செய்யும் ஆற்றல் உங்களுக்குத் தானாகவே வந்து விடும். அதோடு சமூக சேவை எப்படி நன்றாகச் செய்ய முடியும் என்பதையும் நன்றாக உணர்வீர்கள்!" என்று ஆசீர்வதித்து அனுப்பினார்.

கடவுளைத் துதித்தவர்களுக்கு நல்ல 'வாக்குண்டாம், மனமுண்டாம்' என்று பாடிய அவ்வையின் நினைவிலே எழுந்துள்ள அவ்வை இல்லத்துக்குள் நுழைந்தவுடனே அழகான கோயில் காட்சி தருகிறது. அவர்கள் பணி பக்தியோடு தொடங்குகிறது என்று கேட்டவுடன் ராமகிருஷ்ணரின் சமூக சேவையைப் பற்றிய அறிவுரை நினைவுக்கு வந்தது.

அவ்வை இல்லம் தோன்றி இன்று முப்பத்தி நான்கு வருஷங்கள் ஆகிவிட்டன. ஆதி நாளில், பெண்கள் வீட்டை விட்டு வெளியில் வருவதே அபூர்வமாக இருந்த நாளில் சமூக சேவை செய்யத் தயங்காது முன்வந்தவர் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி அவர்கள். திக்கற்று, தறிகெட்டுத் திரியும் குழந்தைகள் சமூகத்தின் தீய சக்திகளாக மாறி வரும் கொடுமையைக் கண்டார் அவர். இவர்களது நலனைப் பேணுவதற்காக ஒரு மாதர் கமிட்டியை உருவாக்கி, 1930ம் வருஷம் மயிலாப்பூரில் ஒரு வாடகைக் கட்டடத்தில் அவ்வை இல்லம் தொடங்க வழி வகுத்தார். முதலில் பத்துக் குழந்தைகளுடன் தொடங்கிய இந்த இல்லத்தில் இன்று சாதிமத பேதமின்றி இருநூறு பேர்


டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி

களைப் பேணிப் பாதுகாத்து வருகிறார்கள். திக்கற்ற குழந்தைகளுக்கும், கதியற்ற கன்னிப் பெண்களுக்கும், நாதியற்ற விதவைகளுக்கும், ஆண்களினும் அவதியடைந்த அபலைப் பெண்களுக்கும் இந்த அவ்வை இல்லம் புது வாழ்வு காட்டும் புகலிடமாகத் திகழ்ந்து வருகிறது.

முதலில் அவ்வை இல்லத்தின் காரியதரிசி ஸ்ரீமதி மந்தா கிருஷ்ணமூர்த்தியிடம் சென்று இல்லத்தின் செயல் முறைகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்று போனோம். அப்பொழுது அவர் சில பிரமுகர்களுடன் அங்கஹீனமுள்ள பெண்களுக்குப் புது வாழ்வு கொடுக்கும் பிரச்னைகளைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார். ஆகவே அவ்வை இல்லத்துத் தலைமை ஆசிரியை ஸ்ரீமதி விஜயத்துடன் இல்லத்தின் பணிகளைத் தெரிந்து கொள்ளச் சென்றோம்.

அவ்வை இல்லத்தில் இரண்டரை வயதிலிருந்து ஆறு வயது வரையுள்ள குழந்தைகளுக்கான பூர்வாதாரப் பள்ளியைக் கண்டோம். அங்கே பச்சிளம் பாலகர்கள் துள்ளிக் குதித்துக் குதூகலத்தோடு இருக்கும் காட்சியைக் கண்டோம். விளையாட்டோடு கல்வியையும் போதிக்கும் இந்தப் பூர்வாதாரப் பள்ளியிலுள்ள ஏழைக் குழந்தைகளுக்கு இலவசப் படிப்பு மட்டுமல்ல; இலவச உணவும் கிட்டுகிறது. பிறகு அங்கிருந்து ஆதாரப் பள்ளிக்குச் சென்றோம். இங்கே பெண்களுக்குக் கல்வி கற்பிப்பதோடு, குடும்ப நிர்வாகம், குடும்பக் கலை ஆகியவற்றிலும் பயிற்சி அளிக்கிறார்கள். அடுத்தபடியாக நம் நாட்டுக்குத் தேவையான ஆசிரியைகளை அளிக்கும் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியையும் பார்த்தோம். இந்த அவ்வை இல்லத்தில் திக்கற்ற குழந்தையாக நுழைந்த சிறுமி கடைசியில் நாட்டுக்குத் தேவையான ஆசிரியைகளாகவும், மருத்துவத் தாதிகளாகவும், பிரசவப் பணிப் பெண்களாகவும் தொழில் புரிய, கண்ணியமுடன் செயலாற்றும் தொழில்களுக்குப் பயிற்சி பெறுகிறார்கள் என்பது பாராட்டுக்குரிய விஷயம்தானே.

"சிறுமிகளுக்குக் கல்வி கற்க ஏற்பாடு செய்திருக்கிறீர்கள். படிப்பற்றவர்களுக்கும் அவ்வை இல்லத்தில் இடமுண்டா?" என்ற சந்தேகத்தை எழுப்பினேன்.

"ஓ! திக்கற்ற மாதர்களுக்குத் தொழில் கல்வி அளிக்கிறோம். நூல் நூற்றல், நெசவு, பிரம்பு வேலை, பாய் முடைதல் முதலிய சிறு தொழில்களில் பயிற்சி அளிக்கிறோம். இதோ, நாம் தொழில் பிரிவுக்குத்தான் செல்கிறோம்!" என்று

தலைமை ஆசிரியை ஸ்ரீமதி விஜயம் பெருமிதத்துடன் எங்களை அங்கே அழைத்துச் சென்றார். அழகழகான ஜமுக்காளங்களையும், துணிகளையும் பல பெண்மணிகள் தயாரித்துக் கொண்டிருப்பதைக் கண்ணுறக் கண்டோம். பிறகு அங்கிருந்து காகித உறை தயாரிக்கும் தொழில் நிலையத்துக்கும் சென்றோம். எந்தெந்த மாதிரி காகித உறை வேண்டுமோ, அதற்குத் தகுந்த 'மாதிரி'கள் அங்கே இருக்கின்றன. அவற்றை இயந்திரத்தில் பொருத்தி, காகிதக் கட்டைச் செலுத்தினால் அந்த இயந்திரம் அந்த அளவுக்குக் காகிதங்களை வெட்டித் தந்து விடுகிறது. பிறகு அதைப் பெண்மணிகள் மடித்துக் காகித உறைகளாகத் தயாரிக்கிறார்கள். இந்தப் பணியில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு நல்ல ஊதியம் கிட்டுகிறது. சுற்றுப்புறங்களில் உள்ள குடும்பப் பெண்களும் இந்தப் பணியில் ஈடுபட்டுத் தங்களுக்கு வருவாய் தேடிக் கொள்கிறார்கள்.



மந்தா கிருஷ்ணமூர்த்தி

''அவ்வை இல்லத்தில் இருநூறு பேர்களுக்கு மேல் இருக்கிறார்களே, இவர்களுக்கு உணவு படைக்க உணவு விடுதியில் தனியாகச் சமையல்காரர்களை நியமித்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார் உடன் வந்தவர்.

''அவ்வை இல்லத்தில் பயிலும் பெண்கள் முறை போட்டுக் கொண்டு சமையல் பணியில் ஈடுபடுகிறார்கள். ஆகவே அவர்களுக்குச் சமையல் கலையிலும் தேர்ச்சி ஏற்பட்டு விடுகிறது. அது மட்டுமல்ல; அவர்களுக்குத் தேவையான காய்கறிகளையும் அவர்களே பயிரிட்டுத் தோட்டக் கலையிலும் பயிற்சி பெறுகிறார்கள்!'' என்றார் ஸ்ரீமதி விஜயம் பெருமை பொங்க.

''அவ்வை இல்லத்தில் பயிற்சி பெற்ற அத்தனை பேருக்கும் உங்களால் வேலை கொடுக்க முடியாதே. அவர்களுக்கு வேலை வாய்ப்புக் கிட்ட ஏதாவது வழி செய்திருக்கிறீர்களா?'' என்று கேட்டோம்.

''ஓ! எங்கள் வேலை தேடித் தரும் நிலையம் அவர்களுக்குகந்த நல்ல வேலையைத் தேடித் தருகிறது. இக்கற்று வந்தவரை நல்ல நிலையில் அமர்த்தினால் அல்லவா எங்கள் பணி பூர்த்தியடையும்; அவர்களும் சமூகத்தில் தலைநிமிர்ந்து வாழ முடியும்!'' என்று கூறினார் தலைமை ஆசிரியை விஜயம்.

அவ்வை இல்லத்தைப் பார்வையிட்டு விட்டு அதன் காரியதரிசி ஸ்ரீமதி மந்தா கிருஷ்ணமூர்த்தியிடம் வந்த பொழுது, ''வெறும் வார்த்தைகளால் விவரிப்பதைவிட நேரிடையான அனுபவம் சிலாக்கியமானதல்லவா? இப்பொழுது எங்கள் இல்லத்தின் சேவைகளைத் தெரிந்துகொண்டிருப்பீர்களே! எங்கள் அம்மா ஸ்ரீமதி முத்துலக்ஷ்மி ரெட்டி அவர்களை இவ்வில்லத்தில் பயின்றவர்களும் நாங்களும் என்றும் மறக்க மாட்டோம்!'' என்று நன்றியுணர்ச்சியுடன் கூறினார்.

ஸ்ரீமதி நீலாவதி ராமசுப்பிரமணியம் ஒரு கூட்டத்தில் ஐம்பது வருஷங்களுக்குமுன் பெண்களின் நிலைமை எடுத்து விளக்கினார். ஒரு கூட்டத்துக்கு அவர் சென்றிருந்தபோது அவரைத் தவிர வேறு எந்தப் பெண்மணியுமில்லையாம். கடைசியில் ஒரு பெண் மட்டும் தலையைக் காட்டினாளாம். அவளது தைரியத்தை மெச்சி அவளை மேடைக்கு அழைத்து வந்து அமர்த்தினாராம். அந்தப் பெண்மணியின் கைகால்கள் வெட வெடவென்று நடுங்கினவாம். அவளை ஸ்ரீமதி நீலாவதி அம்மாள் என்னவென்று விசாரித்தும் பதில் சொல்லவில்லையாம். கடைசியில் அவள் ஊமையாக இருப்பாளோ என்று அருகில்சென்று கையைப் பற்றினாராம். அப்பொழுதுதான், ''என்னை முதலில் வீட்டில் கொண்டு விடுங்கள்!'' என்று அந்தப் பெண் திருவாய் மலர்ந்தாளாம். இந்த மாதிரி காலத்தில் ஸ்ரீமதி முத்துலக்ஷ்மி ரெட்டி டாக்டர் பட்டம் பெற்று லண்டனில் பெண்மணிகள், குழந்தைகள் நோய் வைத்தியத் துறையில் விசேஷத்திறமை பெற்றார். பிறகு அவர் இந்திய மாதர் சங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்கத் தம் வருவாயுள்ள டாக்டர் தொழிலைத் துறந்து மேல் சட்டசபையில் முதல் பெண்மணி சட்டசபையாளராக நுழைந்து பெண்களின் உரிமைக்குப் போராடியது நாடறிந்த விஷயம். —காமு

அவ்வை இல்ல மாணவிகள் நடத்திய ரங்கோலிக் கண்காட்சி; அவர்கள் நடத்திய கலை நிகழ்ச்சி.



## நீங்கள் வாங்குகிறீர்கள்....
## ஆயுட்காலம் முழுவதும்
## கவலையற்ற தையல்
## ஆயுட்கால
## **ஸிங்கர்***சேவை
## ஒவ்வொரு
# **மெர்ரிட்***
## தையல் மெஷினுடனும்

மெர்ரிட் தரும் உணர்வினை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்—கஷ்டமில்லாத வேகக் கட்டுப்பாடு...வழவழப்பான, நிசப்தமான இயக்கம்... நுட்பமான டென்ஷன் கட்டுப்பாடு. ஏனெனில் மெர்ரிட் மிகவும் உறுதியானது; இருப்பினும் சீராக 'பாலன்ஸ்' செய்யப்பட்டது.

இத்துடன் மெர்ரிட்டின் மற்றொரு மேன்மை—இதை ...ன் நீங்கள் எந்த ஸிங்கர் கடையிலிருந்தும் வியாபாரியிடமிருந்தும் பிரபலமான ஸிங்கர் சேவையை நம்பியிருக்கலாம்.






ஸிமெக்
ஆர்ட்நிட்டர்
ஆடோமாடிக் கைநிட்டிங் மெஷின்கள்



மெர்ரிட்
டேபிள், ஸீலிங்
மின் விசிறிகள்



மெர்ரிட்
மின்சார
இஸ்திரிப் பெட்டி

* ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட்மார்க்

55. G. 9 TAM




''அசையும் சம்பவம் வந்து உங்களுக்குத் தெரியுமா ஸார்?''

''தெரியாது பாபுராவ். நான் அப்போது சிறுவனாக இருந்திருக்க வேண்டும்.''

''ஆமாம், ஆமாம்! அது அபூர்வம். இருபது இருபத்திரண்டு வருஷங்கள்... நீங்கள் நம்ப மாட்டீர்கள். அப்போது போலீஸ் தடியடியிலேதான் ஸார் இந்தத் தோள்பட்டை... விறைத்தது...'' என்றதும் தேஷ்பாண்டே என்னை வியப்புடன் பார்த்தார்.

''அப்படியானால் மிஸ்டர் பாபுராவ், உங்களுக்கு அரசியலிலும் தொடர்பு உண்டா?''

''மிஸ்டர் தேஷ்பாண்டே! என்னைப் பற்றி நானே சொல்லிக் கொள்வது பிடிக்கவில்லைதான். இருந்தாலும் நீங்கள் கேட்கும்போது சொல்லாமல் இருக்க முடியவில்லையே. இதோ பாருங்கள். நான் ஒரு பி.எஸ்ஸி. கெமிஸ்ட்ரி. பூனாவில் படித்தவன். ஐந்து வருஷங்கள் ராணுவத்தில் இருந்தேன். ஹோமியோபதி பாஸ் செய்திருக்கிறேன். ஆனால் இந்தத் தேச பக்தி என்று ஒன்று இருக்கிறதே சார்...'' என்று அவர் சற்று நிறுத்தியதுமே எங்களுக்கு எப்படியாவது விஷயத்தை மாற்றினால் போதும் போல இருந்தது.

''மன்னிக்கவும், பாபுராவ், உங்களைத் தெரியாமல் கேட்டு விட்டேன்'' என்றார்.

''அடேடே! இதெல்லாம் என்ன வேண்டியிருக்கிறது. உங்களுக்கு என்னைத் தெரிந்திருக்க வில்லை. அதனால் அப்படிப் பேசினீர்கள்! ஏன்... சுபாஷ்சந்திர போஸ்கூட முதலில் என்னைப் பார்த்ததும் மலைத்துப் போய் விட்டார்.''

தாராபாய் வாயைப் பொத்திக் கொண்டாள். சிரிப்பை அடக்குவதற்காகத்தான் இருக்க வேண்டும்.

''தேஷ்பாண்டேஜி! இரண்டு வருஷங்கள் மெக்கிண்டோஷ் நிறுவனத்தில் இருந்தேன். இப்போது வெளியாகச் சொல்லக் கூடாது. ஒரு பெரிய ஆங்கில தளபதியின் பெண்கள் இருவரை நான் கட்டுக் கொண்டேன் சார்.''

''அடே! சேனையிலேதான் இருந்தீர்களா? நான் மெடிக்கல் கோர் என்று நினைத்தேன்.''

''பேரில் என்று ஒன்றும் இல்லை. ஆனால் நான் ரன்னைட போட்டேன். வியாம் பயர் ஆர்ம். 0.32 வெப்ளி பிஸ்டல். அப்புறம் ஷார்ட் — டிஸ்டன்ஸ் ரைபிள்.... ஆனால் ரேஞ்சு என்னவென்று நினைக்கிறீர்கள்? ஒரு பர்லாங் தூரம் போகும்.''

எச்சில் துப்புவதற்காக, பாபுராவ் ஜன்னலுக்குச் சென்றதும் தாராபாய் தலையில் அடித்துக் கொண்டாள்.

''பேசாமல் சீட்டு விளையாடலாமா?'' என்றேன் தேஷ்பாண்டேயிடம்.

''வேறு என்னத்தைச் செய்வது?'' என்று அவர் அலுத்துக் கொண்டார். தாராபாய் சீட்டுக் கட்டைப் பிரித்துப் போட்டாள்.

பெங்களூர்—பூனா மெயில் வெகு வேகத்துடன் ஓடிக் கொண்டிருந்தது. எக்ஸ்பிரஸில் முதல் நாள் காலையில் பெங்களூரில் ஏறியிருந்தால் இப்படி நள்ளிரவில் இறங்க வேண்டியிருக்காது: அத்துடன் எங்களுடனே வந்து கொண்டிருக்கும் பாபுராவின் தொல்லையும் இருக்காது. அப்பப்பா! பெங்களூரில் ஏறியதிலிருந்து 'நமக்கு இது தெரியும், அது தெரியும், அவனுக்கு என்ன தெரியும்?' என்று மனிதர் அளந்துகொண்டே வருகிறார்.

அந்த இரண்டாம் வகுப்புப் பெட்டியில் என்னையும், பாபுராவையும் தவிர கல்யாண்ராம் தேஷ்பாண்டே என்பவரும், அவர் மனைவி தாராபாய் ஆக ஒரு தம்பதியும் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் மூவருமே பூனா வரைக்கும் போகிறவர்கள்.

கலையாக ரசித்துப் பேசினேன். தாராபாய்க்கும் ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சி இருந்தது. எனவே, ஒருவருக்கொருவர் தாராளமாக உரையாடிக் கொண்டிருந்தோம். ஆனால் போகப் போக, பாபுராவ் ஓயாமலாக 'போர்' அடிக்கத் தொடங்கி விட்டார். அவரிடமிருந்து தப்புவது எப்படி என்றாகி விட்டது எங்கள் மூவருக்கும்.

பெல்காம் நிலையத்தில் பாபுராவ் சற்றுக் காலாற இறங்கியதுமே தாராபாய் தன் கணவரையும் என்னையும் பார்த்துச் சிரித்துக் கொண்டே சொன்னாள்;

''மனிதனுக்குத் தெரியாதது எதுவுமில்லை போலிருக்கிறதே! கம்போடியா பருத்தியிலிருந்து காஷ்மீர்ப் பட்டு வரைக்கும் அலசுகிறாரே....தவிர... எல்லாம் தெரிந்தவர் போலிருக்கிறது!''

தேஷ்பாண்டே சிரித்தார்.

''ஆமாம்! எல்லாம் தெரியும் என்று சொல்லிக் கொள்வார். ஆனால் ஒன்றும் ஒழுங்காகத் தெரியாது..... நுனிப்புல் ஞானம்!'' என்று கூறிக் கொண்டே என்னைப் பார்த்தார்.

பாபுராவ் மீண்டும் ரயிலில் ஏறிக் கொண்டு எங்கள் அனைவரையும் பேச்சுத் திருப்பணியில் இழுக்கத் தொடங்கி விட்டார். அதன் தொடர்ச்சிதான் இப்போது.

புராவ் என்று எதிராக வந்து உட்கார்ந்து கொண்டார்.

''வெரிகுட்! நானே சொல்லலாம் என்றிருந்தேன். நாம் இருவர்தானே பழையது?'' என்று கேட்டதும் நான் தலையை ஆட்டினேன்.

''இந்த மூன்று நான்கு ஆட்டத்தை நினைத்தாலே எனக்குச் சொகோ...ான் நினைவுக்கு வருகிறது. சொகோ...ில் நான் வாழ்ந்த ஆறு மாத வாழ்வு...'' என்றதும் நான் குறுக்கிட்டு, ''அப்புறம் பேசலாம் சார். இப்போது ஆடுங்கள்'' என்றேன் பளிச்சென்று.

ஆட்டம் தொடங்கியது. தேஷ்பாண்டேயும் அவரது மனைவியும் ஒரு கட்சி. நானும் பாபுராவும் ஒரு கட்சி. பாபுராவ் ஆட்டத்தில் ஒரு புலியாக இருந்தார். எப்போதாவது தப்பு ஆட்டம் ஆடும்போது என்னைத் தாக்கினார். ஐயோ! அதை ஏன் கேட்கிறீர்கள்? அப்போது கூடப் பல கதைகளுடன்தான் தாக்கினார். மணி எட்டரைக்கு மேலானதும் ஆட்டத்தைக் கலைத்து விட்டோம். அவரவர்கள் கொண்டு வந்த உணவுப் பொட்டலங்களைப் பிரித்துக் கொண்டோம். சற்றுப் பகிர்ந்தும், பரிமாறிக் கொண்டும் உணவு விவகாரத்தை முடித்துக் கொண்டோம்.

வெகு நேரம் எதை எதையோ பேசிக் கொண்டிருந்தோம். படுக்கையை விரித்துப் போட்டுக் கொண்டனரே யொழிய தாராபாய்க்கும் தேஷ்பாண்டேக்கும் தூக்கம் வரவில்லை. ஒரு நிமிஷம் குறிப்பாக எதைப் பற்றியோ பேசிக் கொண்டிருந்தாற் போல் இருந்தது. சட்டென்று தனது கழுத்திலிருந்து ஒரு முத்துமாலையைக் கழற்றினாள் தாராபாய்.

உண்மையிலேயே அவள் முத்து மாலை அணிந்திருந்ததை இப்போதுதான் நான் பார்த்தேன். ஏறக்குறைய பாபுராவின் முகத்திலும் ஆச்சரியக் குறிதான் இருந்தது.

கழுத்திலிருந்து கழற்றிய முத்துமாலையைப் பெட்டி ஒன்றினுள் வைக்கப் போனாள் தாராபாய். பாபுராவ் அங்கேயும் விடவில்லை.

''மன்னிக்கவும். நான் அதைப் பார்க்கலாமா?'' என்றார். சற்றுக் கோபமே வந்தது எனக்கு. அதென்ன இப்படி அநாகரிகமான குறுக்கீடு?

''ஓ, யெஸ். நீங்கள் பாருங்கள்'' என்று தேஷ்பாண்டே தமது மனைவியிடமிருந்து முத்து மாலையை வாங்கி, பாபுராவின் கைகளில் கொடுத்தார். ''ஏன் மிஸ்டர் பாபுராவ்! உங்களுக்கு முத்து வைரம் இவைகளைப் பரீட்சை செய்யத் தெரியுமோ?'' என்று கேட்டார் குறும்புடன்.

பாபுராவை மடக்கவே தேஷ்பாண்டே இப்படி உரிமையுடன் விளையாடுகிறார் என்று தெரிந்தது. அதற்குள் வண்டியின் வேகம் சிறிது சிறிதாகக் குறைந்து மீரஜ் ஜங்ஷன் வருவதை உணர்த்தியது.

மாலையை ஆராய்ந்து கொண்டிருந்தார் பாபுராவ். தேஷ்பாண்டே அவரைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே கேட்டார்.



''பாபுராவ்! என்ன நல்ல முத்துக்கள் தானே அவைகள்? பம்பாயில் வாங்கினேன்..... அதுவும் ஆஸ்திரேலியாவிலிருந்து வந்த ரகயைச் சரக்கு. என்ன மதிப்பு பெறும் சொல்லுங்கள்.''

பாபுராவ் பதிலேதுவும் பேசாமல் முத்து மாலையைச் சோதித்துக் கொண்டிருந்தார். இந்த நகை விஷயமே எனக்குப் புதிதாகையால் மிட்டாய்க் கடையை வெறித்த நாட்டுப்புறத்தான் போல் ஆகி விட்டேன் நான். சட்டென்று வண்டி ஒரு குலுக்கலுடன் நின்றது.

மீரஜ் நிலையம் வந்து விட்டது. நான் வெளியே எட்டிப் பார்த்தேன். அநேகமாக வேறு யாரும் எங்கள் பெட்டியில் ஏற மாட்டார்கள் என்று நினைத்தபோது, தயக்கத்துடன் எங்கள் பெட்டியைப் பார்த்துக் கொண்டே இருவர் வந்தனர். அவர்கள் தமக்குள் ஏதோ பேசிக் கொண்டிருந்தமாதிரி இருந்தது. ஒருவன் சட்டென்று நகர்ந்து சென்றான். மற்றவன் உள்ளே நுழைந்து விட்டான்.

''இது இரண்டாம் வகுப்பு அப்பா!'' என்றேன், எனக்குத் தெரிந்த ஹிந்தியில்.

உள்ளே மாலையை ஆராய்ந்து கொண்டிருந்த பாபுராவ் தலையை நிமிர்த்திப் பார்த்தார். வந்த ஆளைப் பற்றி அவருக்கும் என்னைப் போல் அதிருப்தியே உண்டானது போலிருந்தது.

அவன் பதில் பேசாமல் ஓர் ஓரமாக அமர்ந்தான். இரண்டே நிமிஷங்களில் கையில் இரண்டு உயர் வகுப்பு டிக்கெட்டுகளுடன் முதலில் மறைந்து போனவன் மீண்டும் வந்து சேர்ந்தான்.

தேஷ்பாண்டே அந்த இருவரையும் பார்த்து முகம் சுளித்துக் கொண்டார். தாராபாய் புடவையை இழுத்துப் போர்த்திக் கொண்டு படுக்கையில் சாய்ந்தார். கதவை

மூடிக் கொண்டு நானும் உள்ளே வந்து உட்கார்ந்தேன். சட்டென்று தேஷ்பாண்டே பாபுராவைப் பார்த்துக் கேட்டார்.

''முத்துமாலையைப் பார்த்தாயிற்று?''

ஒருகணம் பாபுராவின் கண்கள் பனித்திட்டன. அவர் எங்கே யாரை அப்படிக் கூர்ந்து நோக்குகிறார் என்றே புரியவில்லை எனக்கு. ஆனால் சட்டென்று பாபுராவ் விழிப்புக்கு வந்தாற்போல் பதிலளித்தார்.

''தேஷ்பாண்டேஜி, என்ன கேட்டீர்கள்? முத்து மாலையா?.... ஹஹ்ஹாஹஹ்ஹா!''

''என்ன ஸார், சிரிக்கிறீர்கள்? என்னவோ எல்லாம் தெரியும் என்றீர்களே! எவ்வளவு ரூபாய் பெறும்? என்று சொல்லுங்கள், பார்ப்போம்!'' என்றார் அவர் குறும்புடன்.

''முப்பது ரூபாய்!'' என்றார் பாபுராவ். தேஷ்பாண்டேயும், தாராபாயும் விழுந்து விழுந்து சிரித்தார்கள் இதைக் கேட்டதும். எனக்கு இது புரியாத வேடிக்கையாக இருந்தது.

''என்ன சார், இது! இப்படிச் சிரிக்கிறீர்களே....?''

''பின் என்னவாம்! முப்பதினாயிரம் ரூபாய் கொடுத்து மாலையை வாங்கியிருக்கிறோம். இவர் என்னடாவென்றால் முப்பது ரூபாய் என்கிறாரே?''

இப்போது பாபுராவ் முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு தேஷ்பாண்டேயைப் பார்த்தார். ''அப்படியென்றால் நான் சொல்வது தவறு என்கிறீர்களா?''

''தவறா? தவறு இல்லை, ஐயா. பைத்தியக்காரத்தனம். இந்தப் பெட்டியில் ஏறினதிலிருந்தே நீங்கள் எதை எதையோ அளந்து வைக்கிறீர்கள். உங்களை எப்படி மடக்குவது என்று பார்த்துத்தான் இந்த முத்துமாலை சோதனையை ஆரம்பித்தோம். முப்பதினாயிரம் ரூபாய் எங்கே? முப்பது ரூபாய் எங்கே? முப்பது ரூபாய்க்கு இமிடேஷன்தானய்யா கிடைக்கும்'' என்றார் அவர் கோபமாக.

''சந்தேகமே இல்லை. இதுவே இமிடேஷன்தான். அதனால்தான் முப்பது ரூபாய் என்று மதிப்பிட்டேன்.''

''உளறுகிறீர், பாபுராவ்! இதுவும் உமது கோகோ விவகாரம் இல்லை; கபாஷ் பாபுவைப் பார்த்த விஷயம் இல்லை. இது நிஜமாக நடந்தது. நான் இதற்கு ஓர் ஏஜெண்டிடம் முப்பதினாயிரம் ரூபாய் கொடுத்தேன். உமக்காவது, முத்துமாலை, வைரம் பரிசோதனை தெரிவதாவது..... இப்படி மாலையைக் கொடுங்கள்.... தாராபாய், மாலையைப் போட்டுக் கொள். இந்த ஆள் நல்ல தமாஷ் செய்து விட்டார்.''

மாலை கை மாறியது. தாராபாய் முணுமுணுப்புடன் முத்துமாலையை மீண்டும் கழுத்தில் போட்டுக் கொண்டாள். நான் பரிதாபமாகப் பாபுராவைப் பார்த்தேன். அவரோ புதிதாக வந்த இரு பிரயாணிகள் உள்பட எல்லோரையும் பார்த்து விட்டுக் கேட்டார்.

''என்ன? நான் சொல்வதை யாரும் நம்பவில்லையா?

''ஐயா, தேஷ்பாண்டே! தெரிந்துதான் ஐயா சொல்கிறேன்:.... அது இமிடேஷன் முத்துமாலை;..... யாரோ உங்களை ஏமாற்றி விட்டார்கள்; சத்தியமாகச் சொல்கிறேன். உங்களை ஏமாற்றி விட்டார்கள். எனக்கு முத்துப் பரிசோதனை நன்றாகத் தெரியும் தேஷ்பாண்டே. தயவுசெய்து சொல்லுங்கள்.. பம்பாயில் யாரிடம் வாங்கினீர்கள்?''

''என் சிநேகிதர் குல்கர்னி என்பவர் மூலம் நாதுபாய் ஜோஷி என்பவனிடமிருந்து நான்தான் அப்போதே சொன்னேனே இது ரகசியச் சரக்கு ஐயா!'' என்றார் மெலிய குரலில்.

''ஐயோ! நாதுபாய் ஜோஷியா? நன்று ஏமாற்றி விட்டான்! வேறு யாரைக் கொண்டாவது முத்துக்களைப் பரிசோதித்தீர்களா?''

''இல்லை! அதனாலென்ன?''

முதன் முறையாகத் தாராபாய் முகத்தில் கவலைக் குறிகள் பரவின.

''நான் உள்ளதைச் சொன்னேன்: அது இமிடேஷன் மாலைதான். முப்பதினாயிரம் ரூபாய் ஏமாந்து விட்டீர்கள். அம்மணி... இந்தக் கசப்பான உண்மையைச் சொன்னதற்கு என்னை மன்னிக்கவும். பூனா போய்ச் சேர்ந்த பின்னர் நீங்களாவது உங்கள் கணவரைக்கொண்டு வேறு முத்து வியாபாரி யாரையாவது பார்க்கச் சொல்லுங்கள்'' என்று சொல்லிவிட்டுப் படுக்கையை விரித்துக் கொண்டார்.

''ஐயோ! என் பணம் அந்த முப்பதினாயிரம்..... எங்கே என்ன பண்ணி விட்டு இப்படி இமிடேஷனை வாங்கிக் காட்டி ஏமாற்றுகிறீர்கள் என்னை?'' என்று தாராபாய் அங்கலாய்த்தார்.

அப்புறம் தம்பதிகளுக்கிடையே பலத்த வாக்குவாதம் எழுந்தது. கணவரைத் திட்டினாள் மனைவி. பாபுராவைத் திட்டினார் தேஷ்பாண்டே. ஒரு வழியாக அனைவரையும் சமாதானப்படுத்தி வைத்தேன்.

இவ்வளவு ரகளையிலும் அந்த இரண்டு புதிய பிரயாணிகள் எதிலும் ஈடுபடவே இல்லை. அதுவும் ஒரு விதத்தில் நல்லதாகப் போயிற்று.

வண்டி கன வேகத்தில் போய்க் கொண்டிருந்தது. வெளியே எங்கும் கும்மிருள். அந்த இருளிலும் நிலவின் ஒளியில் இயற்கைக் காட்சிகள் சில மினுக்கின. சிறிது நேரத்தில் எனக்குத் தூக்கம் வந்தது; கண் அயர்ந்தேன்.

அதன் பின்னர் கண்ணை விழித்தபோது என்னால் நம்பவே முடியவில்லை. யாரோ என் கைகளை முறுக்குவது போல் இருந்தது. கைகளையோ அசைக்கவே முடியவில்லை. எதிரே கையில் கத்தியுடன் நின்றவனைப் பார்த்ததும் நா உலர்ந்து விட்டது. பக்கத்தில் திரும்பிப் பார்த்தேன். பாபுராவ், தேஷ்பாண்டே இருவருமே கைகள் கட்டப்பட்டும், வாயில் துணி அடைக்கப்பட்டும் இருந்தனர். எல்லாம் அந்த இரண்டு பிரயாணிகளின் கைங்கரியம்தான் என்பதை உணர வெகு நேரம் ஆகவில்லை; அடப்பாவிகளா!

அங்கே இன்னொரு பிரயாணி — திருடன்— கையில் கத்தியுடன் தாராபாயை மிரட்டிக்

ண்டிருந்தான்: கையிலிருப்பதையும், ந்தில் இருப்பதையும் கழற்றிக் கொடு ந்தாள் அப்பெண்மணி. கண்கள் கண் ணீரையும், கைகால்கள் நடுக்கத்தையும் வெளி ட்டுக் கொண்டிருந்தன.

அதற்குள் என் முன்னால் நிற்பவன் என்னை ட்டினான்.

"பணம்! பணத்தை மட்டும் எடு.... ாதும்" என்றான்.

பாக்கெட்டிலிருந்து இருநூறு ரூபாய் யோதையாக வெளியே வந்து சேர்ந்தது. ங்கே இன்னொரு சிம்மக் குரல் தாராபாயை ரட்டியது.

"எடு, அந்தக் கழுத்துச் சங்கிலியை...."

"அது என் அம்மாவின் சங்கிலி.... தை மட்டும் விட்டு விடு.... இதோ இந்த த்து மாலை..... அதை எடுத்துக் கொள் ளன்" என்று தாராபாய் கதறினாள்.

தேஷ்பாண்டே, நான், பாபுராவ் மூவரும் ப்போது துடித்த துடிப்பு! எதிரே கத்தியும், யுமாக நிற்கும் இவர்களை எப்படி வெல்வது?

"எடும்மா, அந்தச் சங்கிலியை....நேர மாகிறது.... இந்த முத்துமாலை யாருக்கு வேண்டும்? முப்பது ரூபாய் வஸ்துவைக் காட்டி நாலு பவுன் சங்கிலியைக் காப்பாற்றிக் கொள்ளப் பார்க்கிறாயா?" என்றான் அவன். அதன் பின்னர் அந்த நாலு பவுன் சங்கிலியைப் பிடித்து இழுத்துப் போட்டுக் கொண்டு முத்துமாலையைத் தாராபாயின் காலடியில் போட்டு விட்டு அபாயச் சங்கிலியையும் இழுத்தான்.

அடுத்த இரண்டு நிமிஷங்களில் வேகம் சற்றுக் குறையவும், கும்மிருளில் கடைசி வரை கத்தியைக் காட்டிப் பயமுறுத்திக் கொண்டே இருவரும் சரேலென்று ஓடும் ரயிலிலிருந்து குதித்தனர். அப்புறம் அவர்கள் எங்கள் பார்வையிலிருந்து மறைந்தனர்.

வண்டியின் வேகம் ஒருமிக்கக் குறைந்ததும் கார்ட் எங்கள் பெட்டிக்குள் மெள்ள வந்ததும் இந்தத் திடுக்கிடும் சம்பவத்தைக் கூறினேன்.

எல்லாரும் புகார் செய்ததும் கார்டு கூறினார்: "இதோ இன்னும் ஒரு மைலில் கரட் ஸ்டேஷன் வருகிறது. நீங்கள் அங்கேயே போலீஸுக்குப் புகார் எழுதிக் கொடுத்து விடலாம்."

கரட் ஸ்டேஷன் வெயிட்டிங் ரூம் அந்த நடுநிசியில் அமர்க்களப்பட்டது. ஒரு வழியாக ஆரவாரம், போலீஸ் விஷயம் இதெல்லாம் முடிவுற்றதும் பாபுராவ் தேஷ் பாண்டேயைப் பார்த்தார்.

"மொத்தம் உங்கள் மனைவியின் நகையின் மதிப்பு எவ்வளவு இருக்கும் ஸார்?" என்றார்.

கோபத்துடன் பதில் அளித்தார் அவர்: "ஏனய்யா வயிற்றெரிச்சலைக் கிளப்புகிறீர்கள்? உமது வேலையைப் பாரும்." ஆனால் தாராபாய்க்கோ அழுகையே வந்து விட்டது. "ஐயோ! இவர் முப்பதினாயிரம் ரூபாய்க்கு ஒரு இமிடேஷன் முத்துமாலையை வாங்கி ஏமாந்தார்! இன்று நான் எண்ணூறு ரூபாய் நகைகளைப் பறி கொடுத்தேன்."

"அம்மணி! முத்து மாலை உங்களிடம் இருக்கிறதா, அப்படியானால்?" என்று பாபு ராவ் துள்ளினார்.



"ஏ பஸ் ஸ்டாண்டே! பஸ் வராமல் இங்கே நின்று நின்று நீயும் சோர்ந்து போனாயோ?"

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

"பாவிகள்! அதை வேண்டாம் என்று போட்டுவிட்டுப் போய்விட்டனர்!" என்று மாலையைக் காட்டியதும் திடீரென்று பாபுராவ் தேஷ்பாண்டேயின் கைகளைப் பற்றிக் கொண்டார்.

"என்னை மன்னியுங்கள், தேஷ்பாண்டே! அந்த முத்து மாலையைப் பற்றி நான் தவறாகக் கூறிவிட்டேன். முதல் தர முத்து மாலைதான் அது. தாராளமாக முப்பதினாயிரம் ரூபாய் பெறும்."

"பின் ஏன் அப்படி 'இமிடேஷன், இமிடேஷன்' என்று அடித்துக் கொண்டீர்கள்?" என்றார் தேஷ்பாண்டே கோபமாக.

"ஸார்! அதன் பலன்தான் ஸார் அந்தத் திருடர்கள் அதை விட்டு விட்டனர்."

நானும் தாராபாயும் வாயைப் பிளந்தோம். தேஷ்பாண்டே பாபுராவைக் கட்டித் தழுவிக் கொண்டார். பாபுராவ் சிரிப்புடன் தொடர்ந்தார்.

"ஸார்! மீரஜ் ஜங்ஷனில் அந்த இரண்டு பேர் ஏறியதுமே எனக்குச் சந்தேகமாக இருந்தது. அதுவும் போதாத வேளையாக...அவர்களின் கண்ணுக்கு எதிரே நான் அந்த முத்து மாலையைச் சோதித்துக் கொண்டிருந்தேன். அவர்கள் திருட்டு விழியைப் பார்த்ததும் எனக்கு இப்படி ஒரு யோசனை பட்டுவிட்டது. இருக்கும் அந்த ரௌடிகள் இப்படி நாம் கண்ணயர்ந்தபோது வாயையும், கையையும் கட்டிப் போடுவார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை" என்றதும் நன்றிப் பெருக்கில் பாபுராவை மீண்டும் அணைத்துக்கொண்டார் தேஷ்பாண்டே.

நான் சட்டென்று பாபு ராவின் தோளைப் பார்த்தேன்.

"ஸார்! ரத்தம் வருகிறது ஸார்!" என்று பாய்ந்து கைக்குட்டையால் துடைத்தேன்.

"ஒரு ரௌடி கம்பால் கீறிவிட்டான் ஸார்! இதெல்லாம் என்ன காயம் ஸார்? 1942ல் பம்பாயில் கபால் போலீஸ் சேவையில்...." என்று அவர் தொடங்கியதும் தாரா பாயின் முகம் கடக் கன தட்டத் தொடங்கியது.



# மண வேதனை!

நவநீ

ஏரி, குளம், குட்டை, ரயில் தண்டவாளம், தூக்குக் கயிறு, எல். ஐ. சி. கட்டடத்தின் உச்சி, சங்கரபவன் காப்பி ஆகியவற்றில் எதுவும் அவன் கால், கழுத்து, கைக்கு எட்டும் தூரத்தில் இல்லாததால், தன் உடம்பினுள் சூடு, சொரணை, ரத்தம் இருப்பதை நிரூபிக்க இயலாதவனாகி மரம் போல் நின்றான் ரங்கநாதன்.

குறைந்த பட்சம் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் என்றாலோ, அதன் பிறகு கை எச்சிலைக் கழுவக்கூடச் சொட்டுத் தண்ணீர் தரமாட்டாள் அந்தக் கபாலி ('கபாலன்' என்பதன் பெண்பால் என்ப) என்று தன் சொந்த மூளையே அவனுக்கு முதன் முறையாகத்தானே உணர்த்திற்று.

இவ்வித சிந்தனைகள் அவன் நினைவில் புரளக் காரணம் இல்லாமலில்லை.

தன் ஆருயிர் நண்பன் ஸ்ரீதரின் திருமணத்துக்கு இன்று காலையில் வர முடியாமல் மாலையில் 'ரிஸப்ஷ'னுக்காவது வரலாம் என்று, (காலிவயிற்றோடு) பஸ்பிடித்து, அங்கு ஒருத்தியின் வயிற்றெரிச்சலை வாங்கிப் பாக்கெட்டுள் போட்டுக் கொண்டு, தவறான ஸ்டாப்பில் இறங்கி, வீடு தெரியாமல் நின்டாரத் தெருவில் நின்று, பிளாட்பாரத்தில் நின்று, ஒரு வழியாக இப்போது வந்து சேர்ந்திருக்கும் 'லேட்' ரங்கநாதனை (கல்லூரியில் படிக்கும் போது என்றும் வகுப்புக்கு லேட்டாகச் சென்று அதன் பயனாகப் பெற்றுக் கொண்ட பட்டப் பெயர் அது). வாயிற்படி வாசலில் ஒரு பெண்மான் ஏறெடுத்தும் பார்க்காமல் சந்தனம், பன்னீர் தெளிக்காமல், ஆள்காட்டி விரலை மட்டும் அழகா நீட்டி, "ஆண்களெல்லாம் அந்தப்புற போங்கள்" என்று ரூல் ஒன்றைத் தன் தொண்டைக்குள் இறக்கிக் கூவிட்டாள்.

"உன் பெயர் என்ன?" என்று யாராவது தம்மைக் கேட்டு விட்டாலேயே குழம்பித் தவிக்கும் ரங்கநாதன் இதைச் செவியுற்றதும், மாற்று நாளில் வரும் கார்ப்பொரேஷன் குழாய்த் தண்ணீர் போல் எக்கச்சக்கமாகக் குழம்பினான்.

ஆள் அசைந்ததற்கு அறிகுறியாக நிழல் ஆடுவதை உணர்ந்த அப்பெண்மான், மழை பெய்தால் பொருட்படுத்தாதது என்று சொல்லப்படுவதும், பொறுமைக்கு எடுத்துக் காட்டாகக் கூறப்படுவதுமான நாலு கால் உயிர்தான் வந்து விட்டதோ என்றையுற்று அரைக் காலே அரைக் கால் பகுதி திறந்த தன் விழி வழியாகப் பார்வையை அவன் மீது படிய விட்டாள்.

"மிஸ்டர்! இங்கு என்ன நடக்கிறது என்று தெரியுமா?" என்று, வாயைத் திறக்காமல் தன் பல்லிடுக்கு வழியே சொற்களைக் கடித்துக் குதறிக் குற்றுயிராய் வெளியேற்றினாள். இப்போது அவள் தொண்டையில் கூவல் இல்லை. நீர் யானை உட்கார்ந்து கொண்டிருந்தது.

"கல்யாணம்!" என்று பணிவாகச் சொன்னான் ரங்கநாதன்.

"அதற்கும் உமக்கும் என்ன சம்பந்தம்? ஒரு டிபனுக்காக இப்படி எத்தனை பேர்கள் கிளம்பியிருக்கிறீர்கள்?" என்றுதான் பார்க்க வேண்டும். அப்போதுதான் ரங்கநாதனின் மூளை, சற்றுக் கீழே இருந்த பிடரியில் ஓங்கித் தட்டி, 'உன்னை அவமதித்துப் பேசுகிறதடா சேலை கட்டிய உருவம்!' என்று அதட்டியது. அப்போதுதான் அந்த அவமானம் தாங்காமல், முதலில் கூறியபடி, ஏரி, குளம், குட்டை முதலியவற்றின் முகவரிகளைத் தேடிற்று அவன் மனம். அப்போதுதான் அவனுக்கு ரோசம் பொத்தல் பொத்தலாகப் பொத்துக் கொண்டு வந்தது. ரோமம் சிலிர்த்தது. உச்சி மயிர் குத்திட்டுக் குச்சி குச்சியாக நின்றது. சினம் மூக்குக்கு மேல் பொங்கிற்று.

கைக் குட்டையை எடுத்து மூக்கைத் துடைத்துக் கொண்டான்.

அவளை ஏறெடுத்துப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! அதே இரட்டைப் பின்னல், அதே வட்டத் திலகம். அவள் வேறு யாருமில்லை. சற்று முன் பஸ்ஸில் அவன் கொட்

கொண்டு வந்த வயிற்றெரிச்சலுக்குச் ாந்தக்காரிதான்!

அந்த வயிறு எரிதல் படலத்தின் சுருக்க வது:

அன்று மாலை சுமார் நாலுமணியளவில், போட்டாள் பண்ணுக இறங்கக் கூடிய ட்டத்தில் நாற்பத்தைந்தாம் பஸ்ஸுக்குள் நடுவது இளங் காளைகளுக்கிடையில் தானும் வனாக நின்று கொண்டிருந்த ரங்கநாதன் ் திடீரென்று ஒரு திருப்பத்தில் திரும்ப, மாமல் சமாளிக்க எண்ணி, இரும்பு போலக் கரும் பட்ட ஏதோ ஒரு பொருளைப் பற்றிக் கொண்டான். அதைத் தலையாக வைத்து ரு பெண்ணைப் பிரம்மன் படைத்திருப்பான் ன்று அவன் கண்டானா? அந்தலை விரட்டன்று திரும்பிற்று. 'குற்றம் குற்றமே' ர்வை ஒன்றை அம்பி வீசிற்று "மிஸ்டர் ப்படி இருக்கிறது? ரூமேயில்லே!" என்று வள் சீறியதைக் கேட்டிருந்தால் பாம்புகளெல்லாம் சேர்ந்து புண்டோடு தூக்குப் போட்டுக் கொண்டு செத்திருக்கும்.

"நான்சென்ஸ்" என்று உறுமிக் குமுறி ன் அவள். ஆழ்வார்ப்பேட்டைத் திருப்பத்தில் இறங்கி, மதுரையிலிருந்து திரும்பிய கண்லி போல் விரைத்தாள்.

அந்த ஸ்டாப்பில் இறங்க வேண்டிய ரங்கநாதன், தான் அதைத் தவறவிட்டு, அடுத்த ஸ்டாப்பில் இறங்கி, திருமண வீட்டைத் தேடிக் கொண்டு நேரம் கழித்து வந்து சேர்ந்தான்.

இங்கே அதே திருமண வீட்டில் அதே ஆரணங்கு அதே ரங்கநாதனைக் கண்டதும் ஆக்ரோஷமாகச் சீறி விழுந்தாள், தன் வரவேற்புக் கடமையையும் மறந்து.

'பெண்ணே! நான் யார் தெரியுமா? கற்பூரம்! அதன் வாசனை உனக்குத் தெரியாது. உன் பாட்டனுக்கும் தெரியாது. மாப்பிள்ளை மடையன் இருக்கிறானே, அவனுக்குத்தான் தெரியும். நானும் அவனும் நகமும், சதையும் அடுப்பும், ஊதும், இக்காலப் பெண்களின் உடையும், உடலும் போல. இப்படி ஒரு அவமானம் எனக்கு நேர்ந்தது என்று அவன் காதில் விழுந்தால், நீ எமனின் வாயில் விழுந்தாய்! நாவை அடக்கிப் பேசு. நாவை அடக்கிப் பேசு...' என்றெல்லாம் பேச நினைத்து உதடுகளை வளைத்துச் சுழித்து, வாயினளவு அகல, ஆழ, உயரங்களைக் காட்டிக்கொண்டு நின்றானே தவிர, அவனுக்கு இருந்த ஆத்திரத்தில் ஒரு வார்த்தையும் வெளியே வரவில்லை. நிற்க.

நின்ற நிலையிலேயே ரங்கநாதனின் மூளை திடீரென்று வேகமாக வேலை செய்தது. தனக்கு மாப்பிள்ளையிடம் இருக்கும் செல்வாக்கை இப்பொழுதே தெரியப்படுத்திவிடக் கூடாது. நளினியை அவன் போக்கிலேயே விட்டுக் கடைசியில் றைவைக்கலாமே?

"சார்! இப்படி வாருங்களேன்! பன்னீர், சந்தனம் வாங்கிக் கொள்ளுங்கள்" என்று எதிர் வரிசையில் இருந்த இரண்டு மூன்று இளைஞர்கள் அவனை அழைத்தபோதுதான் ரங்கநாதனுக்கு, முதலில் நளினி 'ஆண்கள் அந்தப்புறம் போங்கள்' என்று கூறியதன் மெய்ப் பொருள் விளங்கிற்று.

"ஹிஹி எனக்கென்ன! புதிதாக வருகிறவர்களைக் கவனியுங்கள்" என்று நளினியின் காதில் விழுகிற மாதிரி உரக்கப் பேசிக் கொண்டே பெற்றுக் கொண்டான் ரங்கநாதன். கொஞ்சம் வயதானவராகத் தெரிந்தவரை நெருங்கி, "வணக்கம் சார்! காலையில் வரமுடியவில்லை. மன்னிக்கணும். கோபித்துக் கொள்ளக் கூடாது" என்றான்.

பல்லைக் கடிக்கிற சத்தம் அங்கிருந்து வந்தது.

மேட்டூர் சகோதரர்கள் வாரி இறைத்துக் கொண்டிருந்தார்கள் இசை வெள்ளத்தை.

தன் பிள்ளைகள், பெண்கள் அத்தனை பேரையும், கல்லூரி, ஹைஸ்கூல்களில் இடம் பிடித்துச் சேர்ப்பதில் வெற்றி பெற்றுவிட்ட ஒரு தகப்பனார் போல ஹாய்யாக சோபாவில் சாய்ந்தபடி தலையை ஆட்டி ரசித்துக் கொண்டிருந்தான் ரங்கநாதன்.

"அடே! கப்பனு! பொறுத்திருந்து பொறுத்திருந்து நல்ல புளியங் கொம்பாகப் பிடித்து விட்டீரே! உங்க பெண் நல்ல அதிர்ஷ்டசாலிதான்!" என்று ரங்கநாதனுக்கு இந்தண்டை, அந்தண்டை இருந்தவர்கள், அவனை ஒரு பொருட்டாக மதிக்காமல், அவன் காதை ஒரு டெலிபோன் கருவியாக மதித்துப் பேசிக் கொண்டார்கள்.

"என்னண்ணா அப்படிச் சொல்லிவிட்டீர். நம்ம பெண் கிடைச்சதும் பிள்ளையோட அதிர்ஷ்டம்தான் என்று சொல்லும்!" என்றார் மணப்பெண்ணின் தகப்பனார்.

"நிச்சயம் பெண் அதிர்ஷ்டசாலிதான். எங்க பையன் தங்கக் கம்பி ஆச்சே!" என்று ரங்கநாதன் ஆரம்பித்தான்.

"நீங்கள்....." என்றார் பெண்ணின் தந்தை.

"மாப்பிள்ளைக்கு நெருங்கிய நண்பன். உங்களுக்கு என்னைத் தெரியாது. அவன் அப்பாவே என்னைப் பார்த்ததில்லை. போன வருஷம் வரையில் நாங்கள் ஒன்றாகவே படித்தோம். என் யோசனையைக் கேட்டுத்தான் அவன் காலையில் தூக்கம் கலைந்தே எழுந்திருப்பான் என்றால் பாருங்களேன்....." என்றான்.

"ஹிஹி! நமஸ்காரம், நான் பெண்ணின் தகப்பனார். டிபன் சாப்பிட்டீர்களோ? காப்பி, ஓவல் ஏதாவது....." என்றார் அவர்.

"ஹோ ஹோ! எல்லாம் ஆயிற்று. நீங்கள் அலட்டிக் கொள்ள வேண்டாம். ஆமாம்; பெண் என்ன படித்திருக்கிறாள், ஏது செய்கிறாள்...? மனைவிக்குச் சங்கீதம் தெரிந்திருக்க வேண்டும் என்கிறவனாயிற்றே பையன்?" என்று இழுத்தான் ரங்கநாதன்.

"நன்றாய்ப் பாடுவாள். பெயர் ராதா. இப்போது பி. எஸ்ஸி. கடைசி வருஷம் படிக்கிறாள். இதோ இந்தப் பெண்கள் எல்லாம் அவளுடைய தோழிகள்தான்" என்று ஒரு பட்டாம்பூச்சிக் குவியலின் பக்கம் கையை நீட்டிக் காட்டினார் அவர்.

அந்தக் கூட்டத்தில் தானும் ஒன்றாய் நின்று கொண்டு இடுப்பில் இரண்டு கைகளை

யும் எண்ணியபடி சின்னஞ்சிறு சிறு உதட்டை மேல் வரிசைப் பற்களுக்கு அடியில் அழுத்திக் கொண்டு தந்த நிற நெற்றியில் இரு புருவங்களையும் ஒன்றை யொன்று சந்திக்க விட்டு எவ்வளவு நேரமாக நளினி 'போஸ்' தந்தாளோ தெரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் தெரிகிறது. அந்தச் செஞ்சாந்துப் பொட்டு இருக்குமிடத்தில் ஒரு விழி இருந்திருக்குமானால் ரங்கநாதன் இப்படி உட்கார்ந்திருக்க மாட்டான். தனி சாம்பலாகிக் காற்றோடு கலந்து போயிருப்பான்.

ரங்கநாதனின் மகிழ்ச்சி ஏழெட்டு மடங்காயிற்று.

''சார், கப்பன் சார்! தொண்டை இப்படி வற்றிப் போகிறதே. குடிக்க ஏதாவது கொண்டு வரச் சொல்லுங்களேன், பையன் யாரையாவது அனுப்பி — ஏலே தம்பீ! உள்ளே போய் ரங்கநாதன் கேட்டான் என்று குடிக்க ஏதாவது வாங்கி வா'' என்றான்.

சிறுவன் உடனே கீழ்ப்படிந்தான். ஓடிப் போய் ஏதோ தம்ளரில் கொண்டு வந்து ரங்கநாதனை நோக்கி நீட்டினான். ஆனால் அது அவன் கைக்கு வரவில்லை

''என்ன ஆச்சரியம்!'' என்று அவன் வியந்து சுற்று முற்றும் தேடி, ரங்கநாதன், தன்னைச் சுற்றி, 'சர்க்கராமா' சினிமாத் திரை போல, ஏழெட்டு சேலை கட்டிய மதில்கள் முற்றுகையிட்டிருப்பதை உணர்ந்தான். அப்படைக்குத் தலைமை தாங்கி அழைத்து வந்த பேரரசி நளினியின் அழகுக் கையில் செங்கோலாக அந்தத் தம்ளர் வீற்றிருந்தது.

இத்தனை பேர் முன்னிலையில் தானே அவன் வாயில் சொற்களை ஊற்றிவிட்டுப் போகிறான் என்று நினைத்து ஒரு நிமிடம் வெட்கப் பட்டுப் போனான் ரங்கநாதன்.

''மிஸ்டர் ரங்க நாதன்!'' என்றது சாட்டையல்ல; கூரிய வாளல்ல; நளினியின் நாக்குத்தான்!

''கொஞ்சமும் நன்றாக இல்லை. ரங்கநாதன் என்பதே என் அழகிய பெயர். சுருக்க நினைத்தால் ரங்கன் என்று சுருக்கலாம். நாதன் என்று அழைத்தீர்களானால் அது இன்னும் அழகாக இருக்கும்'' என்றான்:

''உங்களுக்காக என் சித்தப்பா வெளியே நிற்கிறார்.''

''ஆ!'' ரங்கநாதனுக்கு ஒன்றுமே புரியவில்லை ''ஏன், ஏன் வெளியே நிற்கிறார். உள்ளே வரச் சொல்லுங்களேன். உட்கார்ந்து சாவகாசமாகப் பேசலாம்.''

''அவர் ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர். இவ்வளவு பேர் எதிரில் வந்து உங்களை அழைத்துச் செல்வதை நீங்கள் விரும்ப மாட்டீர்கள் என்று நினைத்தேன். நீங்களாக வருகிறீர்களா?''

ரங்கநாதனுக்கு விளங்கிவிட்டது.

''ம்ம்ம்...ஹஹ்ஹஹ்ஹா'' என்று ஒரு வில்லன் சிரிப்புச் சிரித்தான். ''மிஸ் நளினி என்னை என்னவென்று நினைத்தீர்கள்! ஹூம், என்னவென்று நினைத்தீர்கள்?''

''பெண்களின் பின்னால் சென்று கலாட்டா செய்யும் ரவுடி என்பதோடு, அழையாத வீட்டில் நுழையும் வரவேற்பு இல்லாத விருந்தாளி என்பதும் எங்களுக்குச் சொல்லிவிட்டா தெரிய வேண்டுமா?'' என்றாள் நளினியின் கூடப் படித்த தோழி.

''தவறு. தங்கள் எண்ணம் முழுதும் தவறு தாய்மார்களே! நான் என் ஆருயிர்த் தோழன், இன்னுயிர் நண்பன், உயிர்ச் சிநேகிதன் ஸ்ரீதரின் கல்யாணத்துக்கு வந்தவன்! ஹஹ்ஹா!''

''யார்? ஸ்ரீதரா!''

''ஆமாம் ஆமாம் ஏன்? வியப்பாக இருக்கிறதா? திகைப்பாக இருக்கிறதா? ஆச்சரியமாயிருக்கிறதா? நீங்கள் எனக்கு ஏற்படுத்த விருந்த அவமானத்தை அவன் அறிந்திருந்தால் உங்களைத் தொலைத்து விட்டிருப்பான் தொலைத்து! இத்தனை நேரம் அவன் உங்கள் கூட்டத்தில் சிக்கிக் கொண்டு விட்டான். அதனால் என்னைப் பார்க்க முடியவில்லை. முடிந்திருந்தால் கதையே வேறுவிதமாயிருக்கும்! ஆனால் உங்கள் சாக்கை உடைத்து நாக்கை அடக்கும் அருமையான சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்திருக்காது! அதற்காக ஆண்டவ


Eye Cool
Eye Cool








ALBO-SANG
BABIES AND ADULTS

க்கு நான் நன்றி செலுத்துகிறேன்'' என்று நக்கினான் ரங்கநாதன்.

அவர்கள் சிரித்தார்கள். குலுங்கக் குலுங்கச் சிரித்தார்கள். ரங்கநாதனுக்குக் கோபம் மீற கடந்தது. 'ஸ்ரீதர்! ஸ்ரீதர்!' என்று ஊமக்களைச் சுற்றியிருந்த கூட்டத்தை விலக்கிக் கொண்டு பாய்ந்தான் ரங்கநாதன். அந்தச் சேலைப் பட்டாளமும் அவனுடனேயே பாய்ந்தது.

''ஸ்ரீத'' என்றவன் வாயடைத்துப் போனான். அங்கு ஸ்ரீதரும் இல்லை, சாந்தரும் இல்லை. இதுவரை பார்த்தேயிராத யாரோ ஒருவன் மாப்பிள்ளையாக இருந்தான். 'அபிராமபுரத்தில் கல்யாணம் என்றால் ஒரு கல்யாணம்தான் நடக்க வேண்டும் என்று விதியா என்ன? சரியாகப் பார்த்துக் கொள்ளாமல் இந்த வீட்டில் ஏதுவோபோல் நுழைந்து விட்டாயே!' என்று ரங்கநாதனின் ஆறாவது அறிவு மற்ற ஐந்து அறிவுகளைப் பார்த்துக் கேட்டது.

ரங்கநாதன் மயங்கிச் சாய்ந்தான். கைக்குக் கிடைத்த தூண் போன்ற ஒன்றைப் பிடித்துச் சமாளிக்கப் பார்த்தான். ஆனால் அதுவும் அல்லவா அவனோடு விழுந்தது.

ரங்கநாதன் கண் விழித்தபோது, தான் ஏதோ ஒரு போலீஸ் ஸ்டேஷனின் 'லாக் அப்'பில் இருப்பதாகத்தான் நினைத்தான். ஆனால், ஏன் இந்த வாழைப் பழங்களும், தேங்காய்களும், இன்ன பிறவும் தன்னோடு 'லாக்கப்'பில் வைக்கப்பட வேண்டும்'' என்று தானே கேள்வி ஒன்றைக் கேட்டுக் கொண்டு வழக்கம் போல் குழம்பினான். விரைவில், தான் இன்னும் கல்யாண வீட்டில் ஓர் அறையில் இருப்பதை அறிந்தான். அதனால் உடம்பில் உதறலுற்றான். விதியே என்று சொல்லிக் கொண்டு தலையில் பட்டென்று அறைந்து கொள்ள முயன்றவன் அம்முயற்சியிலும் தோல்வியுற்றான். சத்தம் 'பட்'டென்று வராமல் 'சொத்' என்று வந்தது. காரணம், தலை இருக்க வேண்டிய இடத்தில் பெரிய 'பாண்டேஜ்' இருந்தது. 'ஹா! தன்னை இப்படி மண்டையில் அடித்து வீழ்த்தி விட்டு, போலீஸை அழைத்து வரப் போயிருக்கிறாளா, நளினி! ஐயோ!' என்று மறுபடியும் படுக்கையில் விழுந்தான்.

''ரொம்ப வலிக்கிறதா?'' என்று அவன் பக்கத்தில் வீணை மிழற்றியது. விழித்துப் பார்த்தவனின் கண்களுக்கு வீணை தென்படவில்லை. நளினிதான் தென்பட்டாள்.

''தாயே! என்னை மன்னித்துவிடு. ஏதோ தெரியாத்தனமாய், விலாசம் தெரியாததால் ஸ்ரீதரின் கல்யாணம் என்று நினைத்து நான் வந்து விட்டேன்.''

''சேச்சே! அப்படியெல்லாம் பேசாதீர்கள்! நீங்கள்தான் மன்னிக்க வேண்டும்!''

''நான்? ஏன்...? ஏன்...?'' அவனுக்கு ஏற்பட்ட வியப்பு பாதிப் பாதி வார்த்தைகளை விழுங்கிவிட்டது.

''ஆமாம்! என்னால்தானே உங்களுக்கு இவ்வளவு பெரிய அடி பட்டது! வாழைப் பழத் தோல் சறுக்கிக் கால் இடறி விழுந்த என்னைக் கீழே விழாமல் தாங்கிப் பிடித்தது. அதனால் நீங்கள் விழுந்து எனக்கு ஏற்பட இருந்த காயத்தை நீங்கள் ஏற்றுக் கொண்டீர்கள் அல்லவா?''

''காயம்? நான்? எங்கே?''

''இதோ பாருங்கள் இதுதான் உங்கள் நெற்றியில் ரத்தக் காயப்படுத்தியது.''

''என் மண்டை ஓடு?''

''இல்லை. உங்கள் மண்டையோட்டோடு விளையாடி, ஆழம் பார்த்த தேங்காய் ஓடு.'' தன் அழகான உள்ளங் கையிலிருந்த அந்தக் கூரிய தேங்காய் ஓட்டைக் காட்டினாள்.

''என்ன ஆச்சரியம்!'' என்று அவன் அந்த விரல்களின் மென்மையைப் பார்த்து ஆச்சரியப்பட்டான். ''நான் பஸ்ஸில் உன் தலையைத் தொட்டதற்கு என் தலைக்குக் கட்டு விழுந்திருக்கிறதே!''

''அதோடு மட்டும் இல்லை. வெளியே சித்தப்பா காத்திருக்கிறார்.''

''ஐயோ!''

''அப்படி அலறாதீர்கள். போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்வதற்கு இல்லை. உங்களுக்கு நன்றி சொல்வதற்கும்...''

''ஊம்...?''

''உங்கள் தலைக்கட்டைக் கால் கட்டாக மாற்றுவதைப் பற்றிப் பேசவும்'' என்ற போது அவள் முகம் ஏன் அப்படிக் குங்குமமாய்ச் சிவக்க வேண்டும்? அவன் கைகளுக்குள் அந்த முகம் ஏன் அப்படிப் புதைந்து போக வேண்டும்? ரங்கநாதன் குழம்பினான்.

### அட்டைப்பட விளக்கம்

முகில் திரையின் வழியே சந்திரன் எதைப் பார்க்கிறான்? நீர்த்துறையில் இறங்கி நீர் பருகும் புரவி என்னத்தைப் பார்க்கிறது? தெரியவில்லையா? நாமெல்லோரும் பார்ப்பதைத்தான் சந்திரன் பார்க்கிறான்; புரவியும் பார்க்கிறது.

தனிமையை நாடிக் கானகத்துக்கு வந்த காதலர்கள் சூழ்நிலையை மறந்து, தங்களை வானத்திலிருந்து பார்க்கும் வெண் மதியை மறந்து, ஏன், தங்களையே மறந்து ஒருவரை யொருவர் உணர்ந்து நிற்கும் நிலைக்கு எதை உவமையாகக் கூற முடியும்? காதலியின் கடைக்கண் பார்வைக்கு ஏங்கி நிற்கும் காதலன். அவனை ஏங்க வைப்பதிலேயே இன்பம் காணும் காதலி — இந்தக் காட்சியைக் காண யாருக்குத்தான் ஆவல் உண்டாகாது? இந்த நிலையில் பேச்சுக்கு இடம் ஏது?

'' கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச் சொற்கள்
என்ன பயனும் இல ''

என்னும் வள்ளுவர் வாக்கை நினைவுபடுத்தும் இவ்வரிய காட்சியை ஓவியர் ரமணி அட்டைப் படமாகத் தீட்டி யிருக்கிறார்.

விக்ஸிலிருந்து புதிய சக்திவாய்ந்த இருமல் மருந்து

# அடமுள்ள இருமலை நிறுத்துகிறது

**இருமல் ஆரம்பமாகும் இடத்தில் செயல்புரிகிறது... இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தில்**






எரிச்சலைக் கொடுக்கும், தூக்கத்தைக் கெடுக்கும் இருமலினால் நீங்கள் அவதிப்படவேண்டாம். இருமல் உங்கள் தொண்டையில் மட்டும் இருப்பதல்ல என்பது மருத்துவ விஞ்ஞானம் இப்போது அறிந்த விஷயம். உண்மையில், இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தில்தான் உங்கள் இருமல் அடங்கியிருக்கிறது. தொண்டை அழற்சி, சுவாசக் குழாய் அடைப்பு ஆகியவைகள் இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தைத் தூண்ட, நீங்கள் இரும ஆரம்பிக்கிறீர்கள்.

இருமல்களை நிறுத்துவதற்கு இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரம் அமைதியடைய வேண்டியது அவசியம். விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள பிரத்தியேகமான "இருமல் சமனிகள்" உங்கள் இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தை விரைவில் அடைந்து, அதை சீக்கிரமே சமனப்படுத்த இருமல் நிற்கிறது.

அதேநேரத்தில், விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள சக்திவாய்ந்த மருந்துகள் தீவிரமாக வேலை செய்து, அடைபட்டுள்ள சுவாசக் குழாயைத் திறந்து, வலிமிக்க மார் இறுக்கத்தை நீக்கி, தொண்டை எரிச்சலைப் போக்குகிறது.

விக்ஸ் பார்முலா 44 உங்களுக்கு இருமலிலிருந்து அதிதமான நிவாரணத்தை அளிக்கிறது ... அடங்காத இருமலிலிருந்து விடுதலை பெற்று, நீங்கள் இரவு முழுவதும் சுகமாகத் தூங்குகிறீர்கள்.

**உங்கள் மார்பில் செயல்புரிகிறது**

விக்ஸ்பார்முலா 44-ல் உள்ள விசேஷ கூட்டுப் பொருள்கள் உங்கள் சுவாசக் குழாய்களில் ஆழ்ந்து வேலை செய்து வலிமிக்க மார்பு இறுக்கத்தை நீக்குகிறது.

**உங்கள் தொண்டையில் செயல்புரிகிறது**

விக்ஸ்பார்முலா 44 இருமலிலும் தொண்டையிலும் ஏற்படும் வெதுப்பு கலந்த தூரிதமாகக் குறைப்படுத்துகிறது. தொண்டை அழற்சியை உடனடியாகச் சமனப்படுத்துகிறது.

**உட்கொள்ளும் அளவு**

உட்கொள்ளும் சரியான அளவை அட்டைப்பெட்டியின் மேல் உள்ள விபரங்களைத் தயவு செய்து படியுங்கள்.




# விக்ஸ் பார்முலா 44

VF-244-

காஃப் மிக்ஸ்சர் இருமல் ஆரம்பமாகுமிடத்தில் செயல்புரிகிறது

# ஒரே ஒரு யோசனை

நா. பி. வரதராஜன்

[சேகர் வருத்தத்துடன் அமர்ந்துள்ளான். அப்போது அவனுடைய நண்பன் மணி அவன் பெயரை அழைத்துக் கொண்டு வருகிறான்.]

மணி: ஹல்லோ, சேகர்! குட்மார்னிங்.. மன்னிக்கவும். குட் ஈவினிங்.

சேகர் (சலிப்புடன்): ம்...ம்... குட்ஈவினிங்... குட் ஈவினிங்... அதற்கு ஒன்றும் குறைச்சல் இல்லை.

மணி: ஏன், உனக்கு என்னப்பா இப்போது குறைச்சல் வந்தது? உனக்குத்தான் கலியாணம் கூட ஆகவில்லையே. இதற்குள்ளே தலை போகிற காரியமாகச் சலித்துக் கொள்ளுகிறாயே...

சேகர்: ஹாம். கலியாணம் நடந்தாத்தான் சலிப்பு ஏற்பட வேண்டுமா? இல்லாவிட்டால் ஏற்படாதா? எனக்குக் கலியாணம் ஆகவில்லை. அதற்காகத்தான் சலிப்பே ஏற்படுகிறது... போ... இதோடு ஆளை விடு...

மணி: அட என் அருமை சேகரா, உனக்காடா இந்தத் துர் ஆசை ஏற்பட்டிருக்கிறது! அடப் பாவி, உன்னைப் போய்ப் புத்திசாலி என்றல்லவா நினைத்திருந்தேன். ஹாம்... இந்த மண்டைக்கு ஒரு போடு... ஒரு போடு! (தலையில் அடித்துக் கொள்கிறான்.)

சேகர்: அடேய் மணி! என் வயது என்ன ஆயிற்று தெரியுமாடா? இருபத்தேழு ஆகிப்போச்சுடா. இன்னும் எத்தனை நாட்கள்தான் நான் இந்தப் பாழாய்ப்போன என். ஜி. ஓ. ஹாஸ்டலிலேயே விழுந்து கிடந்து, கபோத்கஜன் ஹோட்டலிலேயே சாப்பிட்டுத் தற்கொலை செய்து கொள்வது? எனக்கு வாழ்க்கையே வெறுத்துப் போய் விட்டதடா.

மணி: அதுதான் கலியாணம் செய்து கொள்ளப் போகிறாய் என்று சொல்லுகிற போதே தெரிகிறதே... உம்... அது சரி, உனக்கு இருபத்தேழு வயதாயிற்று என்கிறாயே, அதை உன் தகப்பனாரிடத்திலே சொல்லுவதற்கென்ன?

சேகர்: எப்படியப்பா அவையெல்லாவற்றையும் அப்பாவிடத்திலே நேரே போய்ச் சொல்லுவது? அவர்தானே என்னைப் பெற்றார், என் வயது அவருக்குத் தெரியாதா?

மணி: உம்... யார் கண்டது? ஒருவேளை உன்னைப் போலவே உன் அப்பாவும் கணக்கிலே கல்லமா இருப்பாரோ என்னவோ?

சேகர்: அடப் படுபாவி... அதற்குத்தான் அதை அவருக்கு வேறு நினைவுபடுத்தித் தொலைத்தேனே!

மணி: நினைவுபடுத்தினாயா?

சேகர்: ஆமாம்.

மணி: எப்போது?

சேகர்: போன வருஷமே அதெல்லாம் ஆகிவிட்டதப்பா... இதைப் போலத்தான் அப்போதும் கன்னத்தில் கைவைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். வீட்டில் கலியாணத்துக்கு எப்படி அடி போடுவதென்று எனக்கே தெரியவில்லை... அதற்கு ஒரே ஒரு யோசனை யாராவது சொல்ல மாட்டார்களா என்று மனம் கிடந்து பிருண்டிக் கொண்டிருந்தது. மகா புத்திசாலித்தனமாக ஏதோ யோசனை சொல்லுவது போல் நம்முடைய 'டைப்பிஸ்ட்' தாமோதரம் என் முன்னே வந்தான்.

மணி: யார், நம்ம தாமோதரமா?

சேகர்: ஆமாம். அவனேதான். வரப்போகும் என்னுடைய பிறந்த நாளை (பல்லைக் கடித்துக் கொண்டு) அதாவது இருபத்தேழாவது பிறந்த நாளை ஊருக்குப் போய்த் தடபுடலாகக் கொண்டாடச் சொன்னான்.

மணி: ம்... பிறகு!

சேகர்: பிறகு என்ன? அவன் சொன்னபடியே கிட்டத்தட்ட இருநூறு ரூபாய்க்குப் பழமும், பலகாரமும் அணியுமாக வாங்கிக்கொண்டு ஊருக்குப் போய்ச் சேர்ந்தேன். எதிர்பாராத பிறந்த நாள் விழாவைக் கண்டு அப்பாவே திகைத்து விட்டார்.

மணி: அவருக்கு உடனே உன் வயது நினைவுக்கு வந்திருக்கும். பலே....பலே.... நல்ல யோசனைதான்.

சேகர்: என்ன நல்ல யோசனை? முழுவதையும் கேளேன்.... அப்பா திகைத்துப் போய் என்னவென்று கேட்டாரா? உடனே நான் தாமோதரன் சொல்லிக் கொடுத்திருந்த யோசனைப்படியே மிகவும் பக்குவமாக என்னுடைய இருபத்தேழாவது பிறந்த நாள் விழா என்று சொன்னேன்... அதற்கு அவர் என்ன சொன்னார் தெரியுமா?

மணி: என்ன சொன்னார்?

சேகர்: ரொம்பவும் நிதானமாகக் கும்பகோணம் தளிர் வெற்றிலையையும் பன்னீர்ப் புகையிலையையும் குதப்பிக் கொண்டே, 'உம், குழந்தாய், இன்னும் இரண்டு வருஷத்திலேயாவது உனக்கு வேலை உயர்வு கிடைக்குமென்று நினைக்கிறேன்' என்றார். அதோடு சரி. என் இருநூறு ரூபாய் நாசம்.

மணி: ம்... சேகர், உன் சேதி என்னவோ கொஞ்சம் சிரமமானதாகத்தானடா இருக்கு. நான் என்னடாவென்றால் இந்தப் பிறவியில் திருமணமே வேண்டாம் என்கிறேன். வீட்டில் என் அப்பா, அம்மா என்னடாவென்றால், 'பண்ணிக் கொள், பண்ணிக் கொள்' என்று 'கட்டிங் பிளேடு'க்கு நெருக்குவதுபோல் நெருக்குகிறார்கள். ஆனால் உன்



நிலைமையைப் பார்த்தால் தவேறாக இருக்கிறது...ம் சேகர், இதற்கு ஓர் அருமையான யோசனைடா.

சேகர்: என்னடா அது? நீ நன்றாக இருப்பாய். சீக்கிரம் சொல்லித் தொலை.

மணி: நீ எங்கள் வீட்டுக்கும், நான் உங்கள் வீட்டுக்கும் தத்துப் பிள்ளைகளாக மாறிவிடுவோமடா.

சேகர்: சீ...யோசனையைப் பார்... நீ சரியான மண்டு என்பது நிரூபணமாகி விட்டது. சுத்தமான பிதற்றல் யோசனை. நல்ல யோசனையாகச் சொல்.

மணி: இதை விட நல்ல யோசனையாகவா? அப்பொழுது நாளைக்குச் சொல்கிறேன்.

சேகர்: எனக்குத் தெரியுமே, நீ ஊறப் போடுகிற ஆள் என்று. சரி, நாளைக்குத்தான் பார்ப்போமே, உன் வாய் வளத்தை!

காட்சி 2

*[ முன் தினத்தைப் போலவே அலுவலகம் விட்டு வந்ததும் சேகரை விளித்துக்கொண்டே மணி உள்ளே நுழைகிறான்.]*

மணி: ஹல்லோ சேகர், குட் ஈவினிங்...

சேகர் (முணுமுணுக்கிறான்): ஹூம்...

மணி: என்னடா பலமாக முணுமுணுக்கிறாய்? 'விஷ்' செய்வதற்குக் கூடப் பதில் சொல்லாமல்?

சேகர்: பதில் சொல்லித்தான் ஆக வேண்டுமோ? இல்லாவிட்டால் தலையைச் சீவி விடுவாயோ?

மணி: நான் ஏனடா சீவப் போகிறேன்...வரப் போகிறவள் வெங்காயத்தோடு வெங்காயமாக வைத்து ஒரே சீவாகச் சீவித் தள்ளுகிறாள்.



சேகர்: ம்... அப்படியாடா! சொல்லுடா இன்னொரு முறை சொல்லு. அந்தத் தெய்வீக வாக்கியத்தைச் சொல்லுடா... எனக்குக்கூட ஒருத்தி வரப்போகிறாளாடா உன் வாயிலேயே?

மணி: அடேய், கழுதைப் பயலே! சரியாகச் சாகப் போகிறாய் நீ. அதற்காகத்தான் கலியாண ஆசையே ஏற்பட்டிருக்கிறது உனக்கு... ம் அது சரி. இன்று உனக்கு என்னவோ கடிதம் வந்திருந்ததாமே... ஊரிலிருந்துதானே?

சேகர்: ஆமாம். எங்கள் அப்பாதான் எழுதியிருந்தார்.

மணி: என்னவென்று? கலியாணம் ஏதாவது....

சேகர்: நீ வேறு என் வயிற்றெரிச்சலைக் கிளறாதேப்பா.... இந்தா நீயே பார்த்துக்கொள், கடுதாசியை...

*[ அவன் கடிதத்தைத் தர மணி அதை வாங்கிப் படிக்கிறான்.]*

மணி: சும்மா வரச்சொல்லித்தான் எழுதியிருக்கிறார். மற்றப்படி ஒன்றும் காணவில்லையே.

சேகர்: வருகிறதல்லவா தீபாவளி விழா? அதற்கு அவசியம் தவறாமல் வந்துவிட வேண்டுமாம். ஏனென்றால் எனக்கென்று ஒருத்தி புடவை கட்டிக் கொண்டு அங்கே காத்திருக்கிறாளல்லவா?

மணி: அதற்கு மேல் சொல்லாதே: நேற்று முழுதும் உன் நிலைமையை நன்றாக அலசிப் பார்த்துவிட்டேன். கடைசியில், எனக்கு ஒரே ஒரு யோசனைதான் தோன்றியிருக்கிறது.

சேகர் (மகிழ்ச்சியுடன்): என்னது யோசனையா? சொல்லுடா, சொல். உடனே சொல்;

மணி: அநேகமாக அது பலிக்கலாம் என்றே நினைக்கிறேன்.

சேகர்: அட நீ சொல்லப்பா, முதலில்.

மணி: எனக்குக் கொஞ்சம் தயக்கமாக இருக்கிறதடா அதைச் சொல்வதற்கு.

சேகர்: இதோ பார், இதற்கு மேல் 'சஸ்பென்ஸ்' கொடுத்தால் என் மனம் தாளாது. உடனே சொல்லித் தொலை.

*[ அதற்குப் பிறகு தயக்கத்தோடு பேசத் தொடங்குகிறான், மணி.]*

மணி: இந்தக் கடிதத்தின்படி நீ ஊருக்குப் போய் வா. அதே நேரத்தில் இங்கிருந்து நான் உன் அப்பாவுக்கு ஒரு கடிதம் எழுதுகிறேன். அதில் 'கன்னா பின்னா' என்று உன்னைப் பற்றி, நீ எப்போது பார்த்தாலும் ஒரு பெண்ணோடு இங்கு சுற்றிக் கொண்டு இருப்பதாகவும், இரவு நேரத்தில் காலம் தாழ்த்தி வீடு திரும்புவதாகவும் இன்னும் இப்படியே அடுக்கி எழுதிக் கடைசியிலே பயலுக்குக் கலியாணத்தைச் செய்து வைக்காவிட்டால் மேலும் கெட்டுவிடுவான் என்றும் எழுதிக் கீழே 'முகமூடி' என்று கையெழுத்திட்டுப் போட்டு அனுப்புகிறேன். அதைப் படித்ததுமே உன் அப்பா அலறிக்கொண்டு அடுத்த முகூர்த்தத்திலேயே உன்னுடைய கல்யாணத்தை முடிக்கப் பார்ப்பார்.

சேகர் (சிறிது யோசிக்கிறான்): ம்... இது கொஞ்சம் என்னவோபோல் இருக்கிறதாகத் தெரிகிறதேடா.

மணி: அதற்காகத்தான் முன்னமே நான் தயங்கினேன். இருந்தாலும் ஒரு திருத்தம் செய்து விடுவோம்.

சேகர்: என்ன?

மணி: கீழே முகமூடி என்பதை உண்மை விளம்பி என்று மாற்றிவிடுவோம். ஏனென்றால் எழுதப்பட்டதெல்லாம் உண்மைதான் என்று உங்கள் அப்பா நிச்சயம் நம்ப வேண்டுமல்லவா?

சேகர்: அட... அது கிடக்கட்டும்டா... எனக்கு ஒரு நல்ல யோசனை தோன்றுகிறதே!

மணி: என்ன? சொல்லேன். ஒருகால் எதிர்பாராத விதமாகப் புத்திசாலித்தன

# மகத்தான தொடக்கம்...

1907-ம் ஆண்டில் ஒரு எஃகுத் தொழிற்சாலையை ஸ்தாபனம் செய்வது பற்றி டாடா குடும்பத்தினர் பிரஸ்தாபித்தபோது, அந்த முயற்சி வெற்றி பெறுமா என்று அநேகர் சந்தேகப்பட்டனர். ஏனென்றால், அந்தக் காலத்தில் இந்தியாவிலே ஒரு சிறிய குண்டூசிகூட தயாரிக்கப்படவில்லை.

ஆனால், சிறிது காலத்திற்குள்ளேயே, இப்பொழுது ஜம்ஷெட்பூர் என்று அழைக்கப்படுகிற சாக்சியில் இந்தியாவின் முதல் எஃகுத் தொழிற்சாலை நிறுவப்பட்டது. 1912 பிப்ரவரியில் அதிலிருந்து எஃகுப் பாளங்கள் முதன் முதலில் வெற்றிகரமாகத் தயாரித்து வெளியிடப்பட்டன. இந்த நிகழ்ச்சி இந்திய எஃகுத் தொழிலின் தொடக்கத்திற்குச் சின்னமாக அமைந்ததுமல்லாமல் விரைவாக விரிவடைந்துவரும் எஃகுத் தொழில் நீடித்திருப்பதற்குத் தேவையான இரும்புக் கனிமமும் மற்ற மூலப் பொருள்களும் இந்தியா பெற்றிருந்தது என்பதையும் மெய்ப்பித்தது.

50 ஆண்டுகளுக்கு மேலாக ஜம்ஷெட்பூரிலிருந்து கிடைத்துள்ள எஃகு, இந்நாடு தொழில் மயமாகும் வகையிலே முதல் நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள பெரிதும் உதவியிருக்கின்றது. ஏராளமாக எஃகு உற்பத்தி செய்ய, ஸ்டீல் பிளான்டுகள் அமைக்கவும் அணுச்சக்தி உற்பத்தி செய்யவும் என்று ஏற்பாடாகியுள்ள வளரும் பொருளாதாரத்திற்கான முக்கிய பணியை டாடா ஸ்டீல் தொடர்ந்து ஆற்றிவரும்.



மான யோசனையாகக் கூட இருந்து விட லாம் அல்லவா?

சேகர்: நீ இந்தக் கடிதாசியை எழுது. அதே சமயம் நானும் என் அப்பாவுக்கு ஒரு கடிதம் எழுதுகிறேன்.

மணி: என்னதென்று? உண்மையிலேயே என்று போட்டா?

சேகர்: இல்லையடா. உன்னைப் பற்றி எழுதுகிறேன். 'மணி என்னும் ஒரு சிநேகிதன் இருக்கிறான். அவன் என்னோடுதான் வேலை செய்கிறான். இந்த தாலுகாவிலேதான் தங்கி யிருக்கிறான். அவன் மிகவும் நல்லவன். பொய்யே பேச மாட்டான். யோக்கிய மானவன்'-அப்படியென்று உன்னைப் பற்றிப் புகழ்ந்து எழுதி விடுகிறேன். அதற்குப் பிறகு உன் உதவியும் தேவை எனக்கு.

மணி: என்ன உதவி?

சேகர்: இந்த லீவுக்கு என்னுடன் நீயும் என் ஊருக்கு வரவேண்டும்.

மணி: ஏன் அது?

சேகர்: ஆமாம். நீ வந்து... நான் இல்லாத சமயமாகப் பார்த்து எங்கள் அப்பாவிடத் திலே 'பையனுக்குக் கல்யாணத்தைச் சீக்கிர மாக முடித்துவிடுங்கள்' என்று அப்படித் தலையைச் சொறிந்தபோல் மறைமுகமாகச் சொல்லி வை. இரண்டு கோணத்திலிருந்து நெருக்கடி வந்ததும் உடனே அடியேனுக்கு மாங்கல்ய பாக்கியம் ஏற்பட்டு விடும்.

மணி: அப்போ என்னையும் உன் ஊருக்கு வரச் சொல்லுகிறாயா?... சரி போகலாம்.

சேகர்: டேய்! என் கல்யாணம் நடக்க நீ செய்யும் இந்த உதவியை நான் என்றும் மறக்க மாட்டேன்!

மணி: கல்யாணம் ஆன பிறகு நன்றியை வட்டியும் முதலுமாகச் சேர்த்துச் சொல்லு!

சேகர்: டேய்! இந்த நன்றியை அட்வான் ஸாக எடுத்துக்கோப்பா!

## காட்சி 3

[மணியும் சேகரும் ஊருக்குப் போய்ச் சேர்ந்ததற்கு அடுத்த நாள். சேகர் இல்லாத சமயம். சேகரின் தகப்ப னார் தனபால் பின்னே தனியே அமர்ந்து வெற்றிலையைக் குதப்பிக் கொண்டிருக்கிறார். தலையைச் சொறிந்தபடி அவரை அணுகுகிறான் மணி.]

மணி: சேகர் எங்கே போயிருக்காருங்க?

தனபால்: வெளியே போயிருக்கு குழந்தை! உக்காருங்க தம்பி.

[அமருகிறான்.]

மணி: ம்... சரி...அதுவும் நல்லதாகத் தான் போயிற்று. இது என்ன வெற்றிலை? பிரமாதமா இருக்கிறதே!

தன: வேறு என்ன தம்பி, கும்பகோணம் துளிர் வெற்றிலைதான்... இது பன்னீர்ப் புகையிலை... வாசனை பேசவில்லையா?

மணி: ம்... ஆமாமாம்... வந்து... நம்ம சேகரைப் பற்றி ஒன்று உங்களிடத்திலே தனியாகச் சொல்ல வேண்டும்.... அதற் காகவேதான்.... இங்கே வந்து...



''ஊரில் உள்ள அவ்வளவு அரிசியும் எங்கே போச்சுன்னு அனாவசியமா எங்கெங்கோ ஓடித் தேடிக்கிட்டு இருக்காங்க! தெரியுமா உங்களுக்கு?''

தன: என்ன சேதி? நல்லா சொல்லுங் களேன்... அட அவன் எதிரில் இருந்தால் நான் என்ன தம்பி. அவன் பச்சைக் குழந்தை தம்பி. அவனுக்கு ஒன்றும் தெரியாது.

மணி: ம்... இருக்கலாம். இருந்தாலும் அவனுக்கும் வயது இருபத்தேழு ஆயிற்று இல்லைங்களா?

தன: ஆமா... இருபத்தேழு வயசு ஒரு வயசா... அவன் முகத்தைப் பார்த்தீங்களா? இன்னும் பால் மணங்கூட மாறவில்லையே...,

மணி: உம்ம்... அப்படியும் இருக்கலாம். நான் சொல்வது அது இல்லைங்க. உங்க சேகர் பழையபடி இல்லைங்க. பெரிய ஆளா யிட்டான் இல்லைங்களா? அவனுக்கும் மீசை முளைத்து... தோளுக்கு வளர்ந்துவிட்டானே.

தன: ஆமாம். ஒதிய மரம் கணக்காத் தான் வளர்ந்து விட்டான். அது எங்க குடும்ப வாகு தம்பி.

மணி: அட, அதற்கு இல்லீங்க.... ம்... வந்து அது அவன் குற்றமில்லே. அவன் வயது அந்த மாதிரி. இந்த வயதிலேயே எல்லாரும் இந்த மாதிரிதான்.

தன: தம்பி, நீங்க என்ன சொல்றீங்க?

மணி: நசி நசி ... எனக்கும் வருத்தமாகத் தான் இருக்கிறது... நம்ம சேகர் நல்லவன் தான், சுபாவத்திலே....

தன: இப்போ கெட்டுப் போயிட்டான்?..

மணி: ம்... ஆமாம். ஆமாம். இருந் தாலும் அடியோடு அவன் கெட்டுப் போய் விடவில்லை.

தன: ஒரு பெண் பிள்ளையோட எங்கே பார்த்தாலும் சோடியாச் சுத்தறானில்லே?

மணி: ஆ... அட... அது எல்லாம் கூட இங்கே எட்டிப் போயிற்று?

தன: எட்டாமல் என்ன செய்யும்? உன் னைப் போலத் தறுதலைப் பயல் ஒருத்தன் அவனுக்கு நண்பனாகச் சேர்ந்திட்டா..டேய், அயோக்கியக் களவாணிப் பயலே.. நீதானே அந்த உண்மை விளம்பி? நானும் யாரோன்னு நினைச்சுக்கிட்டு இருந்தேன்.

வந்ததும் நீ முழிச்ச முழியே உன்னைக் காட்டிக் கொடுத்திடுச்சு. எருமைக்கடாத் தடிப் பயலே....

மணி: ஐயையோ! (அழுகிறான்) இது என்னங்க.... நான் இல்லீங்க ..

தன: அடேய்.... எங்க வமிசம் நெருப்பு வமிசம்டா. தெரியுமா? எங்க குடும்பத்துக் குழந்தையையா பழி சொல்றே? உனக்கு என்ன திமிருடா... போக்கிரித்தனமாப் பேசறியே... எங்க குழந்தைப் பிள்ளையை நல்லா ஏமாத்திப்பிருக்கியே... இந்தால அடுத்த நிமிஷம் இங்கே நின்னே இடுப்பு எலும்பு முறிஞ்சு போயிடும்.... மருவாதையாக இப்பவே உன் பையைத் தூக்கிக்கிட்டு நடையைக் கட்டு டேஷனுக்கு.

[தனபால் பின்னே மிரட்டலுக்குப் பயந்து மணி அழுதுக் கொண்டே ஓட்டம் பிடிக்கிறான்.]

காட்சி 4

[சேகர் உள்ளே நுழைந்து மணியை அழைத்துக் கொண்டே வருகிறான்.]

சேகர்: மணி.... மணி...

தன: மணியா அவன்? கடைந்தெடுத்த அயோக்கியனாயிற்றே?

மணி: ஏன், என்னப்பா நடந்தது? எங்கே அவன்?

தன: அவன் இந்நேரம் கொடுத்த 'டோ'விலே ஊர் போய்ச் சேர்ந்திருப்பான்.

சேகர்: ஏன்? என்னப்பா நடந்தது? அவன் ரொம்ப நல்லவனாச்சே....!

தன: நல்லவனு அவன்? நல்ல பாம்பு.

[இதற்குள் இடையிலே புகுகிறான், சேகரின் தாயார் மருதாம்பாள்.]

மருதாம்பாள்: ஐயோ...! உங்கப்பாரு எல்லாம் சொன்னாருடா, குழந்தை... அந்தச் சனியன் பிடிச்சவன் உன்னைப் பத்தி எல்லாம் ஏடாகூடமாகச் சொல்லியிருக்கான் தம்பி. ஐயே... நீ இன்னும் குழந்தைப் பிள்ளையாவே இருக்கிறியேடா... இதுகளையெல்லாம் ரொம்பச் சுலபமா தம்பி மோசம் போயிடறியே, கண்ணு... உனக்கு ரோசங்கூட இல்லாமப் போகுதே....

தன: ஆ... என்ன, என்ன...நம்ம தம்பிப் பய மயக்கம் போட்டு விழுந்திட்டானே... இப்படி ஒரு சிநேகிதன் நம்பிக்கைத் துரோகம் பண்ணிக் காலே வாரிவிட்டதைக்கூடச் சகிக்க முடியல்லியே. இந்தக் குழந்தை மனசாலே.... ஐயோ, இந்தக் குழந்தை எப்படித்தான் பிழைக்கப் போகுதோ, தெரியலியே.... தண்ணி கொண்டாடி மருதாம்பா... (தன்னுள்) இந்தக் குழந்தைப் புள்ளைக்குக் கலியாணம் பண்ணி வைக்க வேணுமின்னு நேத்துச் சொன்னேனே... அவளைச் சொல்லணும்...!

## பிரமுகர் வீட்டு நாய்!



# அபூர்வ ஆசை

மலைப் பிரதேசத்தில் ஒதுங்கியிருந்த அந்த வீட்டில் அறுபது வயதைக் கடந்த வயோதிகத் தம்பதிகள் வசித்து வந்தார்கள். காட்டுத் தீயினால் ஒரு நாள் திடீரென்று அந்த வீடு தீப்பற்றித் தரை மட்டமாகி விட்டது.

அந்தத் தம்பதிகளுக்கு ஆறுதல் சொல்ல வந்த உள்ளூர்ப் பாதிரியார் வார்த்தைகளுடன் நிற்காமல் சுற்றுவட்டாரத்தில் நிதி சேர்க்க ஆரம்பித்தார். வீடிழந்து நிற்கும் அந்த முதியோர்களுக்கு மீண்டும் புதிய வீடு போல் ஒன்றைக் கட்டிக் கொடுக்கத் திட்டமிட்டார்.

பணம் எதிர்பார்த்ததற்கு மேலாகவே சேர்ந்தது. வீட்டைக் கட்டி முடித்த பிறகு கொஞ்சம் மிஞ்சலாம் என்று தெரிய வந்தது. பாதிரியார் அந்த மூதாட்டியை அணுகி, ''உங்கள் பழைய வீட்டில் இல்லாத புது வசதி ஏதும் தேவையானால் குறிப்பிடுங்கள். செய்து தர ஏற்பாடு செய்கிறேம்'' என்றார்.

''முப்பத்தைந்து வருடங்களுக்கு மேலாகத் தினசரி பெரும்பாலான நேரத்தை அந்த வீட்டு முற்றத்தில் பாத்திரங்களைக் கழுவுவதில் செலவிட்டிருக்கிறேன். எதிரே நிற்கும் சுவரைப் பார்த்துக் கொண்டேதான் அந்தக் காரியத்தில் ஈடுபட்டிருக்கிறேன். அந்தச் சுவரில் மாத்திரம் ஒரு பெரிய ஜன்னல் வைத்துக் கொடுத்தீர்களானால் அதன் வழியாக எதிரே உள்ள உயர்ந்த பனி படர்ந்த மலைக் குன்றுகளைப் பார்த்துக் கொண்டே உற்சாகமாகப் பாத்திரங்கள் கழுவுவேன். சிரமம் தெரியாது'' என்றாளாம் அந்த மூதாட்டி!

க க க

வில்லியம் ஆலன்வைட் என்ற பிரபல அமெரிக்கப் பத்திரிகையாளர் ஒருவர் தம் புது மோட்டார் காருக்குக் குறிப்பிட்ட ஒரு லைசென்ஸ் நம்பர் பெற மிகவும் சிரமப்பட்டார். கடைசியில் அந்த நம்பரையும் பெற்று விட்டார். ஆனால் அவருடைய நண்பர்களெல்லாம் அந்த நம்பரைப் பார்த்துத் திகைத்தார்கள். ''என்ன? இருந்து இருந்து இந்த நம்பருக்கா ஆசைப்பட்டீர்கள்?'' என்று அநுதாபப்பட்டார்கள்.

''ஆம்!... இந்தக் காரைத் திருட முயல்பவர்கள் தயங்குவார்கள். சாதாரணமாக ஒரு பதின்மூன்று இருந்தாலே அபசகுனம் என்று நினைப்பார்கள். இதிலோ இரண்டு பதின்மூன்றுகள் இருக்கின்றன'' என்று உற்சாகமாகப் பதிலளித்தார் ஆலன் வைட். அவர் சிரமப்பட்டுப் பெற்ற நம்பர் 1313.




க க க

கணவனும் மனைவியுமாக அலங்கரித்துக் கொண்டு தங்கள் காரில் ஒரு விருந்துக்குக் கிளம்பினார்கள். கணவன்தான் காரை ஓட்டினான். சற்றுத் தூரம் போனவுடன் பின்னால் வந்த ஒரு பெண் காரோட்டி முன்னே செல்ல முயல்வதும், பிறகு மெதுவாகச் செல்வதுமாக அவர்களுக்குத் தொல்லை கொடுத்தாள்.

இப்படி இரண்டு மூன்று தடவைகள் ஆன பிறகு இரண்டு கார்களுமே விருந்து மண்டபத்தின் வாசலில் போய் நின்றன. காரிலிருந்து இறங்கிய அம்மாள் நேராக அந்தக் காரோட்டிக் கணவரிடம் வந்தாள்.

''மன்னிக்க வேண்டும். நான் கார் ஓட்டி வந்த விதம் உங்களுக்குக் கோபத்தை உண்டாக்கியிருக்கலாம். என்ன செய்வது? உங்கள் மனைவி எந்த விதமாக ஆடை அணிந்து கொண்டிருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொள்வதற்குத்தான் நான் பல தடவைகள் உங்கள் காரைத் தாண்டிப் போக வழி செய்தேன். ஒரு வேளை என் மாதிரியே அவர்களும் உடையணிந்து வந்திருந்தால் நான் வீட்டுக்குப் போய் வேறு உடை மாற்றிக் கொள்ளலாம் என்ற ஆசை! நல்ல வேளை! இப்போது அதற்கு அவசியமில்லை!'' என்று சொல்லிப் பதிலுக்குக் காத்திராமல் உள்ளே போனாள்!

க க க

புத்தம் புதிய ரோல்ஸ்ராய்ஸ் மோட்டார் கார் அது. அதன் சொந்தக்காரர் உல்லாசமாக மலைப் பிரதேசத்தில் அதை ஓட்டிக் கொண்டு போனார். ஒரு 'ட' திருப்பத்தில் அவசரமாக ஒடித்துத் திருப்பும்போது காரின் முன்பக்கத்து 'ஸ்பிரிங்' ஒடிந்து கார் நின்று விட்டது. சொந்தக்காரர் டெலிபோன் மூலம் சமீபத்திலிருந்த ரோல்ஸ்ராய்ஸ் கம்பெனிக் காரியாலயத்துக்கு நிலைமையை விளக்கினார்.

சில மணி நேரங்களுக்கெல்லாம் கம்பெனிச் சிப்பந்திகள் புது 'ஸ்பிரிங்'குடன் வந்து சேர்ந்தார்கள். பொருத்தி, காரை ஓடும்படி செய்து விட்டுத் திரும்பிச் சென்றார்கள். கார் சொந்தக்காரர் அந்த ரிப்பேருக்கான பில்லை வெகு நாட்கள் எதிர்பார்த்தார். பில் வரவில்லை. அவர் மனச் சாட்சி உறுத்தியது. நேராக அந்தக் கம்பெனியின் கிளைக்கே போய்க் கேட்டார்.

''ரோல்ஸ் ராய்ஸ் காருக்கு ஸ்பிரிங் மாற்றுவதா? ஒரு நாளும் அது நேர்ந்திருக்காதே! நீங்கள் ஞாபகம் பிசகாகச் சொல்லுகிறீர்கள். எங்களிடம் எந்தப் பில் பாக்கியும் இடையாது. நீங்கள் போகலாம்'' என்று மரியாதையுடன் கூறிய சிப்பந்தி தொடர்ந்து தணிந்த குரலில், ''எங்கள் ரோல்ஸ்ராய்ஸ் காருக்கு அப்படி ஸ்பிரிங் உடைந்தது என்னும் விஷயத்தை எங்கள் ரிகார்டுகளில் ஒருநாளும் கொண்டு வரக் கூடாது என்பது எங்கள் ஆசை! உங்கள் விஷயமும் அப்படித்தான்! பில் போடவில்லை'' என்றார்.

—மேனு

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. [illegible]
Registered as a Newspaper in Ceylon

